# ஈறுகளில் ரத்தம் கசியக் கூடாது

—முன் ஜாக்கிரதையாக இருங்கள்!

உடனே கவனிக்க வேண்டும் — ரத்தம் கசியும் ஈறுகள் பற்சொத்தைக்கு ஆரம்பம். கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் ஈறு வியாதிகளையும் பயோரியா ஜின்ஜிவிடிஸ் முதலிய பல் வியாதிகளையும் தடுத்து கட்டுப்படுத்துகிறது. இப் பேஸ்ட் பற்களை சுத்தமாக்குவதுடன் அவைகளை சிறந்தவிதமாய் தேக ஆரோக்யத்தையே பாதுகாக்கும். அதில் உள்ள சோடியம் ரெஸினோலியேட் ஈறு உபாதைகளுக்கு பல் வைத்தியர்களின் சிகிச்சை. பற்களையும் ஈறுகளையும் ஆரோக்கியமாக வைத்திருக்க கிப்ஸ் "எஸ். ஆர்." வழக்கமாக உபயோகியுங்கள்.

*Gibbs*

# "S.R." TOOTHPASTE



GSR. 17-33 TM

D & W. GIBBS LTD., LONDON, ENGLAND



**வாயில்களில் வரு**
**நேர்த்தியான டிஸைன்கள்**

பண்டைய வழக்கமான ரீதியில் மனோஹர மாக பொருந்தி அமையப்பெற்ற டிஸைன் கள்......நவநாகரீகப் பகட்டு வாய்ந்த உல் லாஸ ரகங்கள்......தேர்ந் நிலை மாயா சித்தி ராலங்காரங்களின் நற்ரூப நகல்கள்...... இப்படி எத்தனை விதவிதமான மனமோகன நிறங்கள் கண்ணைக் கவரும் கலர்களில்! இதோ பாருங்கள்! மங்கையரின் மனம் கட்டாவ் வாயில்களிலே நாடுவதில் ஆச் சரியமென்ன விருக்கிறது?

# கட்டாவ்
## வாயில்கள்

அச்சடித்து, சாயம் தோய்த்து
மெர்ஸிரைஸ் செய்யப்பட்டது

ஸ்ரீ கட்டாவ் மகான்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லிமிடெட், பம்பாய் 8.



அஜீரணத்தைப் போக்கி நல்ல ரத் தத்தை விருத்தி செய்து தசைகளை வளர்த்து தாது புஷ்டி யளிப்பது.

காபூல் கனிகளாலும் இமய மலை மூலிகை களாலும் தயாரிக்கப் பட்ட டானிக்.

# அம்ருதா
ரத்த சுத்தி திராவகம்

கேசரி குடீரம் லிட், மதராஸ்

தமிழ் நாடு ஏஜண்டுகள்:
ஸ்ரீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்
மேலக்கோபுர வீதி : மதுரை

மாடர்ன் தியேட்டர்ஸாரின்

# ராஜ ராஜேஸ்வரி

## 5வது வாரம்

பிரபாத்
சென்னை

நியூ சினிமா
மதுரை

டயமண்ட்
கோவை

ஸ்வஸ்திக்
பெங்களூர்

ஸெண்ட்ரல்
கோட்டயம்

ராமவிலாஸம்
காரைக்குடி

டாஜ் - வேலூர்

## 2வது வாரம்

டயமண்ட் சினிமா
கும்பகோணம்

நியூ கமர்ஷியல்
பாண்டிச்சேரி

டைரெக்ஷன் :
டி. ஆர். சுந்தரம்
பி.ஏ. பி.எஸ்.ஸி. (லீட்ஸ்)
எம். எல். டாண்டன்

: விவரங்களுக்கு :

தி மாடர்ன் தியேட்டர்ஸ் லிட்.,
சேலம் :: மதுரை

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 4 இதழ் 24 | 1945 ஜனவரி 21 | தாரண ௵ தை 8





மகாத்மா காந்தி அவதரித்த குஜராத் மாகாணம் இன்னும் சில உத்தமப் புதல்வர்களையும் இந்நாளில் தேசத்துக்கு அளித்திருக்கிறது. அவர்களில் ஸ்ரீ புலாபாய் தேசாய் ஒருவர்.

பம்பாயில் பிரபல அட்வகேட்டாயிருந்து, அட்வகேட் ஜெனரலாகவுமிருந்து, அந்தப் பதவியை விட்டு, மகாத்மாவின் தலைமையில் தேசியப் போரில் ஈடுபட்டுச் சிறைவாசம் செய்தவர்; இந்திய சட்ட சபையில் காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருந்து திறமையாகக் காரியங்களை நடத்திப் பெயரும் புகழும் அடைந்தவர். இத்தகையவருடைய அறிவாற்றல் எல்லாம் சில காலமாகத் துருப் பிடித்துக் கிடந்தது. ஆகஸ்டு தீர்மானத்தை ஒப்புக் கொள்ளாமல் ராஜாஜியை ஆதரித்தவர்களில் ஸ்ரீ புலாபாய் தேசாய் ஒருவர் என்று அடிக்கடி சொல்லப்பட்ட போதிலும், ஸ்ரீ புலாபாய் மட்டும் 'மௌனம் கலகம் நாஸ்தி' என்று இருந்து வந்தார்.

சமீப காலத்தில் ஸ்ரீ புலாபாய் தேசாய் அங்கும் இங்கும் குறுக்கும் நெடுக்குமாகப் போய் வருவதும், வைஸ்ராயையும் மகாத்மாவையும் அவரையும் இவரையும் சந்தித்துப் பேசி வருவதும் பத்திரிகை நிருபர்களின் ஊக சக்திக்கு அசாத்திய வேலையை அளித்து வருகிறது.

ஆனால் அரசியல் மேதையான ஸ்ரீ புலாபாய் தேசாய் தமது மூடிய கையைத் திறந்து, 'உண்டு' என்றோ 'இல்லை' என்றோ தெரிவிக்கப் போவதில்லை. காரியம் ஜெயமானால், விஷயத்தை வெளியிலே சொல்லுவார்; இல்லாவிட்டால் 'கம்' என்று சும்மா இருந்து விடுவார்.

★




★






## —அவன் 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றப் படுவதற்கு நீங்கள் நன்றி யுள்ளவர்களாய் இருக்கவில்லையா?

அவன் ஏதாவது ஒருவகை பிரியமான ஜந்துவுடன் விளையாடுவான். பையனுக்கு பிராணி என்றால் பிரியம். அந்த ஜந்துவானது புழுதியில் புரண்டாலும் அதனிடம் அவனுக்குள்ள அன்பு குறைவதில்லை. அவனுக்கு லைப்பாய் பழக்கம் ஏற்பட்டிருப்பது ஒரு கடாக்ஷம் என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் எவ்வளவு அழுக்கு அவன் மேல் படிந்திருக்கும்.

'அழுக்கு அபாயத்'திலின்றும் லைப்பாய் காப்பாற்று விட்டால் அநேகம் தாய்மார்கள் துக்கத்திலிருந்து ஆறுவார்கள். அழுக்கில் குழந்தைகளுக்கு நோய் உண்டாக்கக் கூடிய கிருமிகள் இருக்கின்றன என்றும் அவை எப்படி நோயைப் பரவச்செய்யும் என்றும் எல்லோருக்கும் தெரியும். ஆனால் குழந்தைகள் ஒழுங்காக லைப்பாய் சோப் தேய்த்துக் குளித்தால், விசாரப்பட வேண்டிய அவசியமே இல்லை. லைப்பாய் கிருமிநாசக சோப். அதில் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க வல்ல ஓர் அபூர்வத் தன்மை இருக்கிறது. அதுதான் அது உலகப் பிரசித்தி பெற்றதற்குக் காரணம். இந்தியாவில் மற்ற எந்த சோப்புக்கும் இந்த பாதுகாக்கும் குணமில்லை.



**லைப்பாய்** நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது அது ஒரு நல்வழக்கம்

இப்பொழுது மெழுகுத் தாளினுல் சுற்றி விற்கப்படுகிறது

L. 49-50 TM LEVER BROTHERS (INDIA) LIMITED




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 21

# என்ன சேதி?

## சென்னையில் சரோஜினி

சென்னை மாகாணத்தில் சென்ற இருபது வருஷ காலத்தில் பிறந்த பெண்களில் பாதிப் பேருக்கு மேல் 'சரோஜினி' அல்லது 'சரோஜா' என்று பெயர் வைக்கப் பட்டிருக்கும். இப்படியாகத் தென்னாட்டுப் பெண் குலத்தின் உள்ளத்தைக் கவர்ந்த ஸ்ரீமதி சரோஜினி தேவி சென்ற வாரத்தில் சென்னைக்கு விஜயம் செய்தார். இதனால் சென்னை நகரமே ஒரு கலகலப்பை அடைந்தது. எங்கே பார்த்தாலும் ஸ்திரீகள் வழக்கத்தைக் காட்டிலும் கொஞ்சம் பெருமையுடன் தலை நிமிர்ந்து நடந்தார்கள். பெண்களால் நடத்தப் படும் ஸ்தாபனங்கள் எல்லாம் ஸ்ரீமதி சரோஜினியை வரவேற்று உபசரிப்பதில் போட்டியிட்டன. "மகாத்மா காந்தி இவ்வளவு தூரம் பெருமையடைந்ததற்குக் காரணம் அன்னை கஸ்தூரிபாய்தான்" என்பது போன்ற பொன் மொழிகளைக் கூறி ஸ்ரீமதி சரோஜினி சென்னை ஸ்திரீகளின் உற்சாகத்தைப் பன்மடங்கு ஆக்கினார். நாட்டில் ஆண் மக்கள் தலைமைப் போட்டியிலும், 'யாரால் காரியம் கெட்டது' என்று சண்டை பிடிப்பதிலும் ஈடுபட்டிருக்கும் சமயத்தில், ஏதோ பெண் மக்களாவது உருப்படியான நிர்மாண வேலைகளைச் செய்து நாட்டை உருப்படச் செய்வார்களா என்று பார்க்கலாம்.

## சென்னையில் சுபிட்சம்!

சென்னை நகரம் கார்ப்பொரேஷன் பரிபாலனத்தின் கீழ் சுபிட்சமாய், சந்தோஷமாய் இருந்து கொண்டிருக்கிறது. ஆமாம்; ஒரு கஷ்டமும் கிடையாது. விறகுப் பஞ்சமோ, அரிசிப் பஞ்சமோ, மண்ணெண்ணெய்ப் பஞ்சமோ, கொசுக்கடி உபத்திரவமோ ஒன்றுமே கிடையாது. மகா சந்தோஷம்! இதில் யாருக்கும் சந்தேகமே வேண்டாம். அப்படிக் கொஞ்ச நஞ்சம் சந்தேகமிருந்தால் சென்ற வாரத்தில் சென்னைக்கு விஜயம் செய்திருக்கும் அகில இந்திய முஸ்லிம் லீக் காரியதரிசி நவாப் ஜாடா லியாகத் அலிகானுடைய வார்த்தையில் கொஞ்சம் நம்பிக்கை வைத்து உங்கள் சந்தேகத்தை அடியோடு போக்கிக் கொள்ளுங்கள்.

"தேசத்தைப் பிளந்தால் அன்றி விமோசனம் இல்லை" என்ற பல்லவியை ஜனாப் ஜின்னாவுடன் கூடச் சேர்ந்து விடாமல் பாடும் நவாப் ஜாடா லியாகத் அலிகானுக்கு சென்னை நகரசபை ஒரு விருந்து நடத்தியது. மேற்படி விருந்திலேதான் நவாப் லியாகத் அலிகான் "இந்த யுத்த நெருக்கடி காலத்தில் சென்னை வாசிகள் இவ்வளவு குதூகலமாக இருப்பதைப் பார்த்தால் கார்ப்பரேஷன் அவர்களுடைய க்ஷேமத்தில் எவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்கிறது என்பது விளங்குகிறது" என்று கூறினார்.

நகரசபை விருந்திற்கு விஜயம் செய்திருந்த பிரமுகர்களைப் பார்த்து விட்டு "சென்னை நகரம் சுபிட்சமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறது. இதற்குக் கார்ப்பொரேஷனே காரணம்" என்று லியாகத் அலிகான் கூறியிருப்பாரானால் அவருடைய அபூர்வ யூக அறிவை நாம் மெச்சுகிறோம். அத்துடன் சென்னைக் கார்ப்பொரேஷனுக்கு இத்தகைய நல்ல 'ஸர்டிபிகேட்' கிடைத்ததற்காகவும் சென்னை வாசிகள் சுபிட்சமாய் இருக்கிறார்கள் என்பதை லியாகத் அலிகான் வாய் மூலம் அறிந்து கொண்டதற்காகவும் நாம் அடையும் சந்தோஷமும் கொஞ்ச நஞ்சமல்ல.

**ஐந்து ரூபாய் பரிசு:** *சென்ற இதழில் வெளியான "பார்த்து விடு!" என்னும் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: கே. ராமசாமி, அமிஞ்சிகரை, சென்னை.*

-உம்மன்

1940-ம் வருஷத்துப் பிரிட்டிஷ் தலைவர் சர்ச்சில்




1918-ம் வருஷத்தில் துரத்தப்பட்ட சர்ச்சில்




பிரிட்டிஷ் பொதுமக்களுக்குள் தற்சமயம் சர்ச்சில்பேரில் அதிருப்தி வளர்ந்து வருகிறது. 1940-ம் வருஷத்துச் சர்ச்சில், சீக்கிரத்தில் 1918-ம் வருஷத்துச் சர்ச்சிலாக மாறிவிடுவாரோ என்ற பயம் ஏற்பட்டிருக்கிறது.

## திருநெல்வேலி ஜில்லா வாசிகளுக்கு ...

அமரகவி பாரதியாரிடம் உங்களுக்கு
உள்ள அன்பையும் பக்தியையும்
தெரிவிக்க ஓர் அரிய சந்தர்ப்பம்!



# பாரதியார் ஞாபகார்த்த நிதிக்காக

திருநெல்வேலி

## தமிழ் இசைச் சங்கத்தின் ஆதரவில்

## செண்டனரி ஹாலில்

## சனிக்கிழமை 3 - 2 - 1945 மாலை







காயன கந்தர்வ சங்கீத சம்ராட்
ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர் ... பாட்டு
சங்கீத ரத்ன
ஸ்ரீ டி. சௌடய்யா ... பிடில்
ஸ்ரீ பழனி சுப்பிரமணிய பிள்ளை ... மிருதங்கம்
ஸ்ரீ ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்



டிக்கெட்டுகள் விபரம்:

ரூ. 10, ரூ. 5, ரூ. 2, ரூ. 1.

காரியதரிசிகள்,
தமிழ் இசைச் சங்கம், திருநெல்வேலி.

# அறிவிப்பு

# இந்திய சர்க்காரின் பரிசு பத்திரங்கள்

## போட்டி முடிவுகள்

1945 வருஷம் ஜனவரி மாதம் 15-ந் தேதி பம்பாய் ரீகல் தியேட்டரில் நடைபெற்ற, 1949 வருஷத் தீய 5 வருஷ வட்டியில்லா பரிசு பத்திரங்கள் சம்பந்தமாய் ஏற்பட்ட இரண்டாவது அரை வருஷ சீட்டு குலுக்குதலின் முடிவுகள் பொதுஜன அறிவிப்பிற்காக இங்கு பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

### ரூ. 100 தொகுதி

| பரிசு துகை | பரிசு பெற்ற பத்திரங்களின் எண்கள் வரிசை A. | வரிசை B. | வரிசை C. |
|---|---|---|---|
| ரூ. 50,000 | 025923 | 084574 | 080539 |
| ரூ. 20,000 | 033789 | 019823 | 012495 |
| ரூ. 20,000 | 059908 | 088871 | 049497 |
| ரூ. 5,000 | 037299 | 061745 | 017198 |
| ரூ. 5,000 | 007589 | 032441 | 050365 |

### ரூ. 10 தொகுதி

பரிசு பெற்ற பத்திரங்களின் எண்கள்

| பரிசு துகை ரூ. | வரிசை AA | வரிசை AB | வரிசை AC | வரிசை AD | வரிசை AE | வரிசை AF | வரிசை AG | வரிசை AH | வரிசை AJ | வரிசை AK |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2,500 | 015670 | 073806 | 027627 | 041820 | 016399 | 054512 | 070988 | 066121 | 017935 | 010034 |
| 1,250 | 011163 | 079738 | 059915 | 012044 | 057230 | 024554 | 082730 | 081932 | 059497 | 010286 |
| 1,250 | 014324 | 077727 | 014692 | 002530 | 014240 | 016516 | 028480 | 067146 | 002564 | 062706 |
| 500 | 026819 | 071379 | 098463 | 049519 | 062512 | 050945 | 042814 | 011551 | 052049 | 032479 |
| 500 | 076072 | 023813 | 038990 | 026625 | 019263 | 088386 | 006516 | 080559 | 019980 | 046188 |
| 500 | 022441 | 023524 | 051146 | 028588 | 013428 | 025864 | 041862 | 027446 | 019443 | 062536 |
| 500 | 054716 | 019267 | 064396 | 073619 | 093135 | 075022 | 063825 | 048958 | 033251 | 047222 |
| 500 | 088159 | 062893 | 054713 | 025333 | 046011 | 006712 | 062970 | 097414 | 094343 | 086034 |
| 250 | 094048 | 063549 | 046537 | 077003 | 042448 | 056568 | 066332 | 056765 | 011761 | 043543 |
| 250 | 057751 | 054392 | 083339 | 025263 | 036419 | 089656 | 057642 | 038242 | 091605 | 026834 |
| 250 | 065417 | 057226 | 070465 | 046953 | 015638 | 002148 | 089286 | 088614 | 010411 | 043992 |
| 250 | 050360 | 059258 | 040294 | 073236 | 066102 | 041899 | 097430 | 030499 | 034965 | 039312 |
| 250 | 006849 | 095931 | 056146 | 069935 | 084564 | 036824 | 071029 | 066964 | 060025 | 014716 |
| 250 | 049366 | 041068 | 049295 | 034933 | 014318 | 033228 | 050962 | 036101 | 076698 | 079964 |
| 250 | 016360 | 081837 | 073583 | 058208 | 096356 | 047515 | 074537 | 078497 | 009838 | 008653 |
| 250 | 029496 | 041417 | 099971 | 081689 | 031116 | 044091 | 059175 | 046086 | 037913 | 082888 |
| 250 | 039561 | 028508 | 026555 | 093590 | 022410 | 019599 | 058467 | 034901 | 039871 | 047790 |
| 250 | 044376 | 084968 | 041562 | 015322 | 066210 | 068248 | 034123 | 053018 | 037476 | 058730 |

தற்சமயம் மறுமுறையாக பரிசு பத்திரங்கள், எல்லா கஜானாக்கள், ஸப் கஜானாக்கள், இந்தியாவிலுள்ள ரிசர்வ் பாங்க் ஆபீசுகள், இம்பீரியல் பாங்குகள் இவைகளில் விற்கப்படுகின்றன.

எல்லா பத்திரங்களும் ஒவ்வொரு ஆறு மாதம் நடக்கும் குலுக்குதலுக்கும் சேர்த்துக்கொள்ளப்படும். 1949 வருஷம் ஜனவரி மாதம் 15-ந் தேதி வரை நடக்கும் எல்லா குலுக்குதலிலும் பரிசு பெறுவதற்கு சந்தர்ப்பங்கள் உண்டு. 1949 வருஷம் ஜனவரி மாதம் 15-ந் தேதி எல்லா பத்திரங்களுக்கும் பூரா பணம் திருப்பிக் கொடுத்துவிடப்படும்.

அடுத்த குலுக்குதல் 1945 வருஷம் ஜூலை மாதம்: இடமும் நேரமும் பின்பு தெரிவிக்கப்படும்.

பரிசு பத்திரங்களில் பணத்தை போட்டு பலமான ரொக்கப் பரிசு பெறும் யோகத்தை வாங்குங்கள்

இந்திய சர்க்கார் நிதி இலாகாவால் வெளியிடப்பட்டது.

# பிரபலஸ்தர் விஜயம்

இப்போதெல்லாம் நமது காரியாலயத்துக்கு அடிக்கடி பிரபலஸ்தர்கள் விஜயம் செய்வது வழக்கமாயிருந்து வருகிறது. எனவே, எப்பேர்ப்பட்ட பெரியவரோ, பிரமுகரோ, பிரதம மந்திரியோ, பிரஸிடெண்டோ, சர்வாதிகாரியோ, பிரதம சேநாதிபதியோ,—விஜயம் செய்யும் போதிலும் நாம் அதிகமான வியப்புக்கு ஆளாவதில்லை. ஆனாலும், திடீரென்று கூரையின் உச்சிமோட்டு வழியாக ஒரு பிரபலஸ்தர் வந்து இறங்கினார் என்றால், நாம் ஒரு துளி ஆச்சரியமாவது அடையாமல் இருக்க முடியாதல்லவா? அப்படி அந்தப் பிரபலஸ்தர் வந்து இறங்கிய போது, ஒரு வேளை சத்தமில்லாமல் வெடிக்கும் சர்வநாச வி 3 குண்டுதான் வந்து இறங்கி விட்டதோ என்று ஒரு நிமிஷம் திகில் அடைந்தோம். பிரபலஸ்தரின் முகத்தையும், முகத்தில் நீண்டிருந்த மீசையையும் சற்று நிதானமாகப் பார்த்த பிறகு வி 3 குண்டு இல்லை என்ற நிச்சயம் உண்டாயிற்று.

"உலகத்துப் பிரபலஸ்தர்களுக்குள்ளே தாங்கள் யாரோ?" என்று கேட்டோம்.

பிரபலஸ்தர் மௌன விழி விழித்தார்.

காது கொஞ்சம் மந்தமாக்கும் என்று நினைத்து உரத்த குரலில் "தாங்கள் யார்?" என்று கேட்டோம்.

'உஷ்' என்று உதட்டில் விரல் வைத்தார் பிரபலஸ்தர்.

இரகசியம் பேசும் குரலில், "வெளியில் யாராவது வருகிறார்களா, ஜன்னல் வழியாகப் பாரும்!" என்றார்.

பார்த்தோம்; ஒருவரையும் காணவில்லை.

"ஒருவரும் இல்லை!" என்று தைரியப்படுத்தினோம்.

"என்னைத் தெரியவில்லையா? அவ்வளவு அறியாமையிலா உங்களை ஆங்கில சர்க்கார் வைத்திருக்கிறார்கள்? முதலாளி சர்க்காரின் கொடுமையே கொடுமை!......நன்றாகப் பாரும்!"

"மீசையைப் பார்த்தால் கொஞ்சம் தெரிகிறாப் போல் தோன்றுகிறது. ஆனால், அப்படியிருக்குமா என்று சந்தேகமாயிருக்கிறது."

"என்ன சந்தேகமாயிருக்கிறது?"

"இவ்வளவு தூரம் மௌனக் கட்டு அவ்வளவு தூரத்திலிருந்து தோழர் ஸ்டாலின்......"

"ஆ! தெரிந்துகொண்டு விட்டீரா?"

"நிச்சயமாக, தோழர் ஸ்டாலின் தானே?"

"ஆமாம், நான்தான்!"

"அடாடா! கொஞ்சம் முன்னறிவிப்புச் செய்திருக்கக் கூடாதா? தக்கபடி மேளதாளங்களுடன் வரவேற்பதற்கு ஏற்பாடு செய்திருப்பேனே?"

"நல்ல வேளையாய்ப் போச்சு!"

"ஏது?"

"மேள தாளங்கள் வைக்காதது."

"உங்கள் காரியங்கள் எல்லாம் இப்படித்தான் இருக்கிறது. நாள் கணக்காகவும் மாதக் கணக்காகவும் சும்மா இருக்கிறீர்கள். திடீரென்று ஒரு நாளைக்குக் கிளம்புகிறீர்கள். 'வார்ஸாவைப் பிடித்து விட்டோம்' என்று திடுக்கிடும் அறிக்கை விடுகிறீர்கள்..."

"ஓஹோ! அந்தச் செய்தி இங்கே வந்துவிட்டதா?"

"நீங்கள் வருவதற்கு முன்னாலேயே வந்து விட்டது. ஆமாம்; வார்ஸாவைப் பிடிப்பதற்கு உங்களுக்கு ஏன் இத்தனை காலம் ஆயிற்று?"

"ஏன் ஆகாது?"

"வார்ஸாவுக்கு அருகில் உங்கள் படைகள் முன்னமே வந்து விட்டனவே? இத்தனை நாள் ஏன் ஆயிற்று என்று கேட்கிறேன்."

"எதை எதை எப்போது எப்போது செய்ய வேண்டுமோ, அப்போதுதான் நாங்கள் செய்வோம். அவசரப்பட்டுக் கொண்டு முன்னேறவும் மாட்டோம்; முன்னேறிய இடத்திலிருந்து பின் வாங்கவும் மாட்டோம்."

"அவ்வளவு தானே? வேறொரு காரணமும் இல்லையே?"

"வேறு காரணம் என்ன இருக்க முடியும்?"

"ஒன்றுமில்லை; வார்ஸா, போலந்தின் தலை நகரமல்லவா? தலை நகரத்தைப் பிடித்து விட்டால், அதில் ஏற்படக் கூடிய போலிஷ் கவர்ன்மெண்டு எந்த கவர்ன்மெண்டு என்ற

சந்தேகம் ஏற்படலாம். அதைச் சந்தேகமில்லாமல் தீர்த்துக் கொண்ட பிறகுதான் வார்ஸாவைப் பிடிப்பது என்று நீங்கள் காத்திருப்பதாக வதந்தி உலாவியது!''

"அதைப் பற்றி எனக்கு எப்போதும் சந்தேகமே கிடையாதே!''

"அப்படியென்றால், வார்ஸாவில் ஏற்படப் போவது உங்களுடைய லப்ளின் கவர்ன்மெண்டுதானாகும்?''

"என்னுடைய லப்ளின் கவர்ன்மெண்டு அல்ல; போலிஷ் பொது மக்களுடைய லப்ளின் கவர்ன்மெண்டு.''

"இருந்தாலும், லண்டனில் ஐந்து வருஷமாகக் காத்துக் கொண்டிருக்கும் போலிஷ் கவர்ன்மெண்டாரை இப்படி நீங்கள் இலவு காத்த கிளியாகச் செய்து விட்டீர்களே?''

"ஊரை விட்டு ஓடிப்போன கிளிக்கு எப்படி ராஜ்யம் கிடைக்கும்? லண்டனிலுள்ள போலிஷ் கவர்ன்மெண்டார் எப்படிப் பட்டவர்கள் என்று உமக்குத் தெரியுமா?''

"ஏதோ கொஞ்சம் தெரியும். ஜெர்மன் டாங்கிகளையும் பாம்பர்களையும், பழைய பத்தாம் பசலி குதிரைப் படைகளை வைத்துக்கொண்டு எதிர்க்க எண்ணிய கர்நாடகப் பேர்வழிகள்.''

"ஆமாம்; அதனால்தான் மூன்றே வாரத்தில் போலந்தை ஜெர்மானியரிடம் கோட்டை விட்டுவிட்டு ஓடிப்போனார்கள். விஸ்தாரமான நிலப் பிரதேசங்களைத் தங்களுக்கும் பிரயோஜனமில்லாமல் குடியானவர்களுக்கும் பிரயோஜனமில்லாமல் தரிசு போட்டுக் கொண்டிருந்த மூட ஜமீன்தார்களின் பிரதிநிதிகள்.''

"அந்த நிலப் பிரதேசமெல்லாம் இனிமேல் சர்க்கார் யாருடையதாகுமல்லவா?''

"நியாயமாகச் சர்க்கார் ஆகும். குடியானவர்கள் தங்களுடைய சொந்த நிலமாகக் கருதிப் பயிர் செய்வார்கள்.''

"சரிதான்; அப்படியானால், நீங்கள் கைப்பற்றும் பிரதேசங்களில் எல்லாம் பொது உடைமையை நிலை நாட்டுகிறீர்கள் என்ற புகார் உண்மைதானே?''

தோழர் ஸ்டாலின் சற்று ஆழ்ந்த யோசனை செய்து விட்டு, "அது எப்படி சாத்தியம்? எங்கள் ருஷியாவிலேயே இப்போது பொது உடைமை கிடையாது. முதலாளித்வம் வந்து விட்டது என்று நான் ஒரு பக்கம் பிரசாரம் செய்கிறீர்களே? பின், நாங்கள் போகிற இடத்தில் எதற்காகப் பொது உடைமையை நிலை நாட்டப் போகிறோம்?''

"போலந்தும் பொது உடைமையும் எப்படியாவது போகட்டும். ஐரோப்பிய யுத்தம் எப்போது முடியும், அதைச் சொல்லுங்கள், தோழரே!'' என்று கேட்டோம்.

"ஜெர்மனி தோற்றதும் ஐரோப்பிய யுத்தம் முடியும்'' என்றார் தோழர் ஸ்டாலின்.

"ஜெர்மனி எப்போது தோற்கும்?'' என்று கேட்டோம்.

"நேசக் கட்சியார் ஜயிக்கும்போது!'' என்றார் தோழர்.

"அது எப்போது?'' என்று கேட்டோம்.

"எனக்கு எப்படித் தெரியும்? சர்ச்சிலையும், ரூஸ்வெல்ட்டையும் கேளுங்கள். இல்லாவிடில், ஜனரல் ஐஸனோவரையும், மாண்ட் கோமரியையும் கேளுங்கள்.''

"அவர்கள் எல்லாம் கெடு வைத்து வைத்துத்தான் தவறிப் போய்க் கொண்டிருக்கிறார்களே!''

"அதனால்தான் நான் கெடு வைப்பதில்லை.''

"ஏதோ நீங்கள் இப்போது மிகப் பெரிய படையெடுப்புத் தொடங்கியிருக்கிறீர்களாமே? 250 டிவிஷன் படைகள் அதாவது 60 லட்சம் பேர் கொண்ட சைன்யங்கள் ஜெர்மனியைக் கவிந்து கொண்டு முன்னேறுகின்றனவாமே? கூடிய சீக்கிரத்தில் ஜெர்மனியை உண்டு இல்லையென்று தீர்த்து விட யோசித்திருக்கிறீர்களாமே?''

"யார் சொன்னது?''

"ஜெர்மன் அறிக்கைகள்.''

"அப்படியானால் ஜெர்மானியரையே கேளுங்கள்.''

"நீங்கள் சொல்லமாட்டீர்களாக்கும். போகட்டும்; யுத்தத்தில் ஜயித்ததும் ஜெர்மனியை என்ன ஐயா, செய்யப் போகிறீர்கள்?''

தோழர் மௌனம் சாதித்தார்.

"ஜெர்மனியைப் பங்கிடுவது பற்றி புகாரும் நீங்களும் ஏதோ இரகசிய ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறீர்களாமே?''

இதற்கும் மௌனம்.

"யுத்தத்திற்குப் பிறகு உலக உத்தாரணம் செய்யும் விஷயத்தில் உங்கள் அபிப்பிராயம் என்ன?''

மறுபடியும் மௌனம்.

"கிரீஸின் தற்போதைய நிலைமையைப் பற்றி உங்கள் கருத்து என்ன?''

தோழர் தலையை ஒரே ஆட்டாக ஆட்டினார்.

"ஜப்பான் யுத்தத்தைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?"

மௌனம் மௌனமே.

"ஈரான் நாட்டு எண்ணெய்க் கிணறுகள் எல்லாம் ருஷியாவின் பொது உடைமையா, அல்லது பிரிட்டிஷ்-அமெரிக்காவுக்கும் பங்கு உண்டா?"

எல்லையில்லா மௌனம்.

"போகட்டும்; எங்கள் இந்திய தேசத்தைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? அதையாவது சொல்லுங்கள். இல்லாவிட்டால், தயவு செய்து இடத்தைக் காலி செய்து விட்டு எழுந்து போங்கள்."

தோழர் ஸ்டாலின் 'உஷ்' என்று மறுபடியும் உதட்டில் விரலை வைத்து சமிக்ஞை செய்துவிட்டு, ஜன்னல் பக்கம் சுட்டிக் காட்டினார்.

ஜன்னலுக்கு வெளியே தோட்டத்தில் சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய கண்களில் யாரையோ தேடிக் காணாதவர்களைப் போன்ற ஏமாற்றப் பார்வை குடிகொண்டிருந்தது.

அவர்கள் கொஞ்சதூரம் போனதும், "ஏன் இங்கே வந்து ஒளிந்து கொண்டு உம்முடைய வேலையையும் கெடுத்துக் கொண்டிருக்கிறேன், தெரிகிறதா?" என்று தோழர் ஸ்டாலின் கேட்டார்.

"ஒருவாறு தெரிகிறது!" என்றேன்.

"நீர் கேட்ட கேள்விகளையெல்லாம் என்னைக் கேட்டுப் பிராணனை வாங்குவதற்காகத்தான் சர்ச்சிலும் ரூஸ்வெல்டும் என்னைத் தேடி அலைகிறார்கள். அவர்களுக்குப் பயந்து இங்கே வந்து புகுந்தால், நீரும் அதே கேள்விகளைக் கேட்டு என் வாயைக் கிளறப் பார்க்கிறீரே?"

"மற்றக் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லா விட்டால், வேண்டியதில்லை. இந்தியாவைப் பற்றி மட்டும் உங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லி விடுங்கள்."

"பேஷாகச் சொல்கிறேன். இந்தியர்களாகிய நீங்கள் மிகச் சிறந்த நாகரிக முன்னவர்கள். மகா பரோபகாரிகள். அன்னியர்களுக்காக, முக்கியமாய் ஆங்கிலேயருக்காகவே உயிர் வாழ்ந்து வருகிறவர்கள். பாவம்! இங்கிலீஷ்காரர்கள் இந்த யுத்தத்தில் எவ்வளவு கஷ்ட நஷ்டங்களை அடைந்திருக்கிறார்கள், தெரியுமா?"

"கொஞ்சம் தெரியும். அமெரிக்கப் பத்திரிகை ஒன்று கூடச் சமீபத்தில் எழுதியிருந்தது. பிரிட்டிஷாருடைய வீடு வாசல்கள் எல்லாம் போய்விட்டனவாம். அவர்களுடைய வியாபாரம் போய் விட்டதாம். கைத்தொழில் போய் விட்டதாம். பண வசதி போய் விட்டதாம். கடனாளிகளாகப் போய் விட்டார்களாம்......"

"ஆமாம், ஆமாம். யுத்தத்துக்குப் பிறகு ஜெர்மனியிடமிருந்து அவர்களுக்கு நஷ்ட ஈடு, மண்ணாங்கட்டி என்று ஒன்றும் கிடைக்கப்போவதில்லை. ஜெர்மனியில் ஏற்கெனவே ஒன்றும் கிடையாது. கொஞ்சம் நஞ்சம் இருந்தால் நான் பார்த்துக் கொள்வேன். எனவே, பாவம், பிரிட்டிஷார் பூரா பூராவும் இந்தியாவைத்தான் நம்பியிருக்கிறார்கள். யுத்தத்தினால் அடைந்த நஷ்டங்களையெல்லாம் இந்தியாவைக் கொண்டுதான் இட்டு நிரப்பிக் கொள்ளப் போகிறார்கள்......"

"ஐயையோ! ஏற்கெனவே ஆயிரம் கோடி ரூபாய் இந்தியாவுக்கு அவர்கள் தரவேண்டுமே!"

"ஆமாம், ஆமாம். சென்ற ஐந்து வருஷமாக நீங்களும் பிரிட்டிஷாரிடமே பூரண அதிகாரத்தையும் கொடுத்து அவர்கள் இஷ்டப்படி எல்லாம் விட்டு வந்திருக்கிறீர்கள். இப்படிப் பரோபகாரார்த்தமாகவே, உங்களுக்குள்ளே ஒற்றுமைகூட ஏற்படுத்திக் கொள்ளாமல் இருக்கிறீர்கள். யுத்தம் முடிந்து ஒரு பத்து வருஷத்துக்கு இப்படியே இருந்தால், பிரிட்டிஷார் தலை நிமிர்ந்து விடுவார்கள்."

"அதெல்லாம் முடியாது. யுத்தம் முடிந்ததும் இந்தியா சுதந்திரம் பெற்றே தீரும்."

"அடடா! அப்படியெல்லாம் செய்து விடாதீர்கள்! ஆக்கப் பொறுத்தவர்கள் ஆறப் பொறுக்கக் கூடாதோ? இத்தனை நாள் காத்துக் கொண்டிருந்தவர்கள்..."

"முடியாது முடியாது."

"எல்லாம் முடியும். பரோபகாரிகளாகிய உங்களால் முடியாத காரியம் உண்டா?"

"இப்படியெல்லாம் இங்கே பேசாதீர். பேசினால், காங்கிரஸ் சங்கங்களிலிருந்து கம்யூனிஸ்டுகளைத் துரத்தியடிப்பது போல். உம்மையும் இங்கிருந்து துரத்தியடித்து விடுவோம்!" என்று கையிலிருந்த பேனாவை ஓங்கினேன்.

அடுத்த விநாடி ஜன்னலில், சாம்பல் நிறப் பூனையின் வால் மட்டுந்தான் தெரிந்தது. போகட்டும்; ஒழியட்டும்; சர்ச்சில், ரூஸ்வெல்ட்டினிடம் அகப்பட்டுக் கொண்டு தோழர் ஸ்டாலின் நன்றாய்த் திண்டாடட்டும்!




அத்தியாயம் 46

## பிக்ஷுவின் மனமாற்றம்

**பா**றைகளைப் பார்வையிடுவதற்காக மகேந்திர பல்லவர், ஆயனர், சத்ருக்னன் ஆகிய மூவரும் மடத்திலிருந்து புறப்பட்டபோது, வாசலில் சிவகாமி வந்து நின்றாள்.

மகேந்திரர் தற்செயலாக அவளைப் பார்ப்பதுபோல பார்த்து, "அம்மா, சிவகாமி! நீ கூட எங்களுடன் வருகிறாயா?" என்றார்.

சிவகாமி மறுமொழி சொல்லத் தயங்கினாள். ஆயனர் அப்போது, "வா, சிவகாமி! போய்விட்டு வரலாம். இங்கே என்ன செய்யப் போகிறாய்?" என்றார்.

எனவே, சிவகாமியும் புறப்பட்டாள். அவளைத் தொடர்ந்து ரதியும் சுகரும் கிளம்பினார்கள்.

• • •

சிவகாமி தயங்கியதற்குக் காரணம் இருந்தது.

பெட்டிக்குள் சிங்க இலச்சினையை வைத்து விட்டுச் சிவகாமி நிமிர்ந்தபோது தூண் மறைவில் காவித் துணி தெரிந்தது. தூணில் மறைந்திருப்பது புத்த பிக்ஷுதான் என்பதையும் உணர்ந்தாள்.

அன்று அதி காலையில் வந்து அவர்களுடன் பேசிக்கொண்டிருந்த புத்த பிக்ஷு வாசலில் வேற்று மனிதர் குரல் கேட்டதும், "கொல்லைப் புறமாகப் போய் விடுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனார். போனவர், எப்படித் திரும்பி வந்தார். ஏன் மறைந்து நிற்கிறார் என்று சிவகாமிக்குச் சிறிது வியப்பாயிருந்தது

நேற்று வரைக்கும் இம்மாதிரி சந்தர்ப்பம் நேரிட்டிருந்தால் அவள் உடனே கூச்சல் போட்டிருப்பாள்.

ஆனால் காலையில் புத்த பிக்ஷுவுடன் பேசிக்கொண்டிருந்ததிலிருந்து அவளுடைய மனம் அவர் விஷயத்தில் அடியோடு மாறிப் போயிருந்தது. அவர் மேல் இருந்த சந்தேகங்கள் எல்லாம் நீங்கி நல்ல எண்ணமே உண்டாகியிருந்தது.

இந்த மனமாறுதலுக்குக் காரணமாயிருந்தது என்னவென்றால், குமார சக்கரவர்த்தி மாமல்லரைப் பற்றி பிக்ஷுவின் அபிப்பிராயம் அடியோடு மாறிவிட்டதாக அவர் கூறியதுதான்.

"மூட ஜனங்கள் கூறியதைக் கேட்டு, மாமல்லரைப் பயங்கொள்ளி என்றும், கோழை என்றும் சொன்னேன். அப்படிச் சொன்ன நாவை அறுத்துக் கொள்ளலாம் என்று இப்போது தோன்றுகிறது. போர்க்களத்தில் நானே நேரில்



பார்த்தேன். அடடா! 'வீரத்துக்கு அர்ச்சுனன்' என்ற பேச்சை இனி மேல் விட்டு விட்டு, 'வீரத்துக்கு மாமல்லன்' என்று வழங்க வேண்டியதுதான். ஆயிரம் பேருக்கு மத்தியில் தன்னந் தனியாக நின்று வாளைச் சுழற்றி எப்படி வீரப் போர் புரிந்தான்! அஸகாய சூரன் என்றால் மாமல்லன்தான்! ......"

இவ்விதம் புத்த பிக்ஷு மாமல்லருடைய வீரத்தை வர்ணித்ததுடன், அவருடைய குணத்தையும் வர்ணித்தார். மாமல்லனை 'ஸ்திரீலோலன்' என்று தாம் கூறியதும் பெருந் தவறு என்று அறிந்து கொண்டதாகவும், இளம் பெண்களைக் கண்ணெடுத்தே பார்க்காதவன் என்றும், அப்பேர்ப்பட்ட உத்தம வீர புருஷனைக் காதலனாகப் பெறுவதற்கு எந்த இராஜகுமாரி பாக்கியம் செய்திருக்கிறாளோ என்றும் சொல்லச் சொல்ல, சிவகாமி தன்னுடைய மகத்தான பாக்கியத்தை எண்ணி இறும்பூது அடைந்ததுடன், புத்த பிக்ஷுவின் மீதும் முன்னெப்போதுமில்லாத நல்ல எண்ணமும் விசுவாசமும் கொள்ளலானாள்.

அசோகபுரத்தில் திடீரென்று புத்த பிக்ஷு மறைந்த காரணத்தை ஆயனர் கேட்டதற்கு, நாகநந்தி கூறியதாவது:—"அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்கள்? கங்க நாட்டுத் துர்விநீதனை நான் அறிவேன். பௌத்த சங்கத்தில் பற்றுக் கொண்டவன். என்னிடமும் அவனுக்குப் பக்தியுண்டு. குண்டோதரன அன்று ஒரு ஓலை கொண்டுவந்து கொடுத்தானல்லவா? 'துர்விநீதன் காஞ்சி மேல் படை எடுத்து வருகிறான்' என்ற செய்தி அந்த ஓலையில் இருந்தது. அத்தகைய விபரீத முட்டாள்தனமான காரியத்தை அவன் செய்யாமல் தடுக்கலாம், திருப்பிப் போகச் சொல்லலாம் என்ற எண்ணத்துடன்தான் இரவுக்கிரவே ஓடினேன். குண்டோதரனுடைய குதிரையைக்கூட அதற்காகத்தான் எடுத்துக் கொண்டேன். என் முயற்சி பயன்படவில்லை. நான் போவதற்குள் போர் மூண்டு விட்டது. நான் எதிர் பார்த்தபடியே, துர்விநீதன் வீர மாமல்லனால் முறியடிக்கப்பட்டு ஓட நேர்ந்தது. எங்கே ஓடினானோ, என்ன கதி அடைந்தானோ தெரியாது. ஒவ்வொருவரும் தன் தன் பலத்தை நன்றாக உணர்ந்து எதிரியின் பலத்தையும் தெரிந்து கொண்டு, போரில இறங்க வேண்டும். அந்த விஷயத்தில் உங்கள் மகேந்திர சக்கரவர்த்தி வெகு கெட்டிக்காரர். எந்தச் சமயத்தில் பின்வாங்க வேண்டும், எந்த சமயத்தில் கோட்டைக்குள் புகுந்துகொள்ள வேண்டும் என்பதெல்லாம் அவருக்குத் தெரியும். மகேந்திர பல்லவருடைய தந்திரமும், மாமல்லனுடைய வீரமும் சேர்ந்திருக்கும்போது பல்லவ சாம்ராஜ்யத்துக்கு என்ன குறைவு?"

இப்படியெல்லாம் மாமல்லருடைய புகழைக் கேட்கக் கேட்க சிவகாமிக்கு உள்ளம் குளிர்ந்ததுடன் புத்த பிக்ஷுவின்மேல் விசுவாசம் அதிகமாகிக் கொண்டே வந்தது.

"சுவாமி! தாங்களும் இந்த கிராமத்தில் எங்களுடனேயே தங்கியிருந்து விடுங்களேன்!" என்று சொன்னாள்.

அதற்குப் பிக்ஷு, "இல்லை. அம்மா, இல்லை! ஓரிடத்தில் தங்கியிருப்பது என்னுடைய தர்மத்துக்கே விரோதம். தென்னாடு இப்போது என்னைப் போன்ற பிக்ஷு யாத்திரிகர்களுக்குத் தகுந்த இடம் இல்லை. தெற்கேயிருந்து பாண்டியன் படையெடுத்து வருகிறான். வடக்கேயிருந்து சளுக்கன் படையெடுத்து வருகிறான். ஏதோ உங்கள் இருவரையும் ஒரு பத்திரமான இடத்தில் விடவேண்டுமென்றுதான் கவலைப்பட்டேன். இந்த கிராமம் உங்களுக்குத் தகுந்த இடந்தான். புத்த மகாப் பிரபுவின் அருள் இருந்தால், இந்த யுத்தமெல்லாம் முடிந்த பிறகு மறுபடியும் உங்களைப் பார்ப்பேன். ஆயனரே! அடுத்த தடவை உங்களைப் பார்க்க வரும்போது, அஜந்தா இரகசியத்தைக் கட்டாயம் அறிந்துகொண்டு வருவேன். சிவகாமி! இங்கேயே உங்களுடன் தங்கி, உன்னுடைய தெய்வீக நடனக் கலையை ஓயாமல் பார்த்துக் கொண்டிருக்க எனக்கு எவ்வளவோ இஷ்டந்தான். ஆனால், அதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா?......" என்று பிக்ஷு கூறியபோது, அவருடைய குரலில்

தொனித்த கனிவு, சிவகாமியின் உள்ளத்தை உருக்கிவிட்டது.

"அப்படி பட்ட பாக்யத்துக்கு எந்த அதிர்ஷ்டசாலியான புமான் கொடுத்து வைத்திருக்கிறானோ?" என்று கூறி நாகநந்தி பிக்ஷு பெருமூச்சு விட்டார்.

"அடிகளே! இப்போது எங்கே பிரயாணம்?" என்று சிவகாமி கேட்டாள்.

"வட நாட்டுக்குத்தான் போகிறேன்" என்றார் பிக்ஷு.

"காஞ்சி வழியாகப் போவீர்களா?" என்று சிவகாமி கேட்டபோது, கமலிக்குச் செய்தி சொல்லியனுப்ப வேணும் என்ற எண்ணம் அவள் மனதில் இருந்தது.

"நிச்சயமில்லை, அம்மா! நான் போகும்போது காஞ்சிக் கோட்டை திறந்திருக்கிறதோ, என்னமோ?...... திறந்திருந்தால், போவேன். காஞ்சியில் எனக்குக்கூட ஒரு காரியம் இருக்கிறது. இராஜ வம்சத்தினரைப் பார்ப்பதில்லை என்ற என்னுடைய விரதத்தைக் கூடக் கைவிட்டு, மாமல்லனை நேரில் பார்த்து, அவனுடைய மகத்தான வீரத்தை வாழ்த்தி விட்டுப் போக விரும்புகிறேன்......"

"அடிகளே! நேற்றைக்கு நீங்கள் இவ்விடம் வந்திருந்தால், மாமல்லரைப் பார்த்திருக்கலாமே!" என்றார் ஆயனர்.

"என்ன?" என்று பிக்ஷு, தூக்கி வாரிப் போட்டவராய்க் கேட்டார்.

"குமார சக்கரவர்த்தி மூன்று நாளாக இங்குதான் இருந்தார். அவர்தான் எங்களை வெள்ளத்தில் முழுகாமல் காப்பாற்றினார்!" என்று ஆயனர் கூறியது, புத்த பிக்ஷுவுக்கு எல்லையற்ற ஆச்சரியத்தை விளைவித்ததாகத் தோன்றியது.

இந்த சந்தர்ப்பத்திலேதான், வாசலில் குண்டோதரன் கதவை இடிக்கும் சத்தம் கேட்டது. அப்போது பிக்ஷு, "ஆயனரே! உங்களுடைய சிஷ்யன் குண்டோதரன் என் பேரில் அநாவசியமான சந்தேகம் ஏதோ கொண்டிருக்கிறான். என்னை இங்கு பார்த்தானால் வீணாக வலுச் சண்டைக்கு வருவான். இன்னும் யாரோ வேற்று மனிதர்கள் வாசலில் வந்து நிற்பதாகக் கூடத் தோன்றுகிறது. நான் இப்படியே கொல்லைப்புறமாகப் போய் விடுகிறேன். விடை கொடுங்கள்" என்று கூறிவிட்டுக் கிளம்பினார். போகும்போது, "சிவகாமி! மறுபடியும் உங்களைப் பார்க்கிறேனோ, என்னமோ? ஆனால் நான் எங்கே போனாலும், என்ன செய்தாலும் உன்னை மறக்க முடியாது. உன்னை மறந்தாலும் உன் நடனத்தை மறக்க முடியாது" என்று கனிந்த குரலில் சொல்லிவிட்டுப் போனார்.

அப்படிப் போனவரைத் திடீரென்று உள் அறையில் தூண் மறைவில் பார்த்ததும் சிவகாமிக்குச் சிறிது வியப்பாய்த்தானிருந்தது. ஆயினும், மறுபடியும் தன்னிடம் ஏதோ சொல்வதற்காக ஒருவேளை காத்திருக்கிறாரோ என்னமோ, சக்கரவர்த்தி போன பிறகு வந்து விசாரித்துக் கொள்ளலாம் என்று வெளி அறைக்கு வந்துவிட்டாள். உண்மையில், பிக்ஷு போகாமல் தங்கியிருந்தது சிவகாமிக்குச் சிறிது மகிழ்ச்சியை அளித்தது என்றே சொல்ல வேண்டும்.

* * *

இப்போது மடத்து வாசலில், சக்கரவர்த்தி, "நீயும் எங்களுடன் வருகிறாயா?" என்று கேட்டதும், தூண் மறைவிலிருந்த புத்த பிக்ஷுவை நினைத்துக் கொண்டு சிவகாமி ஒரு கணம் தயங்கினாள். எனினும், நாகப்பிடியமைந்த கத்தியினால் மாமல்லருக்கு வரவிருந்த ஆபத்தைப் பற்றியும், தன்னால் அது தடைப்பட்டது பற்றியும் சக்கரவர்த்தி கூறியதுதான் அவள் உள்ளத்தில் அப்போது முக்கியமாய் இடம் பெற்றிருந்தது. அந்த சம்பவத்தைப் பற்றி மேலும் சில விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்னும் ஆசையினால், ஆயனரும் சேர்ந்து அழைத்ததும், "ஆகட்டும், அப்பா!" என்று சொல்லிப் புறப்பட்டாள்.

நாகநந்தி பிக்ஷு தான் திரும்பி வரும் வரையில் ஒருவேளை அங்கேயே இருக்கலாம் என்ற எண்ணமும் அவள் மனத்தில் இருந்தது.

அத்தியாயம் 47

# திரிமூர்த்தி கோயில்

**பா**றைகளை நோக்கி நடந்து போய்க் கொண்டிருந்த போது, சிவகாமி எதிர்பார்த்தபடி, மாமல்லரைப் பற்றியோ அவருக்கு நேர்ந்த ஆபத்தைப் பற்றியோ சக்கரவர்த்தி ஒன்றும் பேசவில்லை. ஆயனரிடம் சிற்பக் கலையைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டார். இரண்டு பேரும் மற்றப்படி உலகத்தையே மறந்து பேசிக் கொண்டு போனார்கள்.

பாறைப் பிரதேசத்தை அடைந்த பிறகும் அப்படித்தான். இந்தப் பாறையை யானையாகச் செய்யலாம், இதைச் சிங்கமாகச் செய்யலாம், இதைத் தேராக அமைக்கலாம், இதை வஸந்த மண்டபமாக்கலாம் என்றெல்லாம் திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். கடைசியாக ஒரு பெரிய பாறையைக் குடைந்து கோயிலாக அமைப்பது என்றும், கோயில் வேலையையே முதன் முதலில் தொடங்குவது என்றும் தீர்மானித்தார்கள்.

"இந்த ஒரே கோயிலில் மூன்று மூர்த்திகளையும் பிரதிஷ்டை செய்யலாம், ஆயனரே! மூன்று கர்ப்பக் கிருஹங்களை அமைத்து விடுங்கள்!" என்றார் மகேந்திர பல்லவர்.

"சுவாமி! மூன்று மதத்தினருக்கும் தனித் தனியாக மூன்று கோயில்கள் அமைத்து விட்டால் நல்லதல்லவா? சச்சரவுக்கு இடமில்லாமல் போகுமல்லவா?" என்று ஆயனர் கேட்டார்.

"மூன்று மதத்தினருக்கா? நான் அப்படிச் சொல்லவில்லையே? மும்மூர்த்திகள் என்று யாரைச் சொன்னதாக எண்ணினீர்கள்?"

"சிவபெருமான், புத்த தேவர், ரிஷப தேவர் — இவர்களைத் தானே?"

"கிடையவே கிடையாது. பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய திரிமூர்த்திகளைத்தான் சொன்னேன்."

"அப்படியா?"

"ஆம்; இன்னும் கொஞ்ச காலத்துக்குப் புத்தர், ஜைனர் என்று என்னிடம் சொல்லாதீர், ஆயனரே! அவர்கள் விஷயத்தில் அப்படி என் மனம் கசந்து போயிருக்கிறது."

"ஐயோ! அருள் நிறைந்த தங்கள் உள்ளம் கசந்து போகும்படி அவர்கள் என்ன செய்து விட்டார்கள்?"

"ஆஹா! ஜைனர்களுக்கும் புத்தர்களுக்கும் நான் எவ்வளவு கௌரவம் கொடுத்திருந்தேன்? அவர்களைத் திருப்திப் படுத்த என்னவெல்லாம் செய்தேன்? ஒன்றும் பயன்படவில்லை. கேளும், ஆயனரே! பாடலிபுத்திரத்து ஜைனப் பள்ளியில் துர்விநீதன் ஒளிந்து கொள்ள அவர்கள் இடம் கொடுத்தார்கள். பல்லவ சைனியம் அந்த ஜைனப் பள்ளியை இடித்துத் தரைமட்டமாக்கிப் பாதாள குகையில் ஒளிந்திருந்த துர்விநீதனைப் பிடிக்க வேண்டியிருந்தது. இப்போது அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள், தெரியுமா? தேச தேசமெல்லாம் போய், 'காஞ்சி மகேந்திர பல்லவன் ஜைனப்பள்ளியை இடித்துத் தள்ளினான்' என்ற பழியைப் பரப்பப் போகிறார்கள்! ......... அது போகட்டும், ஆயனரே! எனக்கு அதிகமாகத் தாமதிக்க நேரமில்லை. போய் வருகிறேன். யுத்தம் முடிந்து நான் திரும்பி வந்து பார்க்கும் போது கோயில் வேலை முடிந்திருக்க வேண்டும். சத்ருக்னா! நம்முடைய தெப்பத்தை எங்கே விட்டு விட்டு வந்தோம்? சீக்கிரம் பார்த்துக் கொண்டு வா!" என்று கூறி விட்டு, "ஆயனரே!



நீங்களும் கொஞ்சம் பார்க்கிறீர்களா? இந்த நதிக் கரையில் எங்கேயோ தெப்பத்தைவிட்டிருக்கிறோம். கொஞ்சம் இரண்டு பேருமாய்ச் சென்று பார்த்தால் சீக்கிரம் கண்டு பிடிக்கலாம்!" என்றார்.

அவ்விதமே ஆயனரும் சத்ருக்னரும் தெப்பத்தைத் தேடிக் கொண்டு சென்றார்கள்.



"நான் சொன்ன விஷயம் பொய், சிவகாமி!"

சிவகாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவளுடைய உள்ளம் குழம்பிற்று. அந்தக் குழப்பத்தில் ஆறுதலும் மகிழ்ச்சியும் ஒருவகை ஏமாற்றமும் கலந்திருந்தன. மாமல்லருக்கு அபாயம் நேரவில்லையென்பதில் ஆறுதல்தான்; ஆனால் தன்னால் அந்த அபாயம் நீங்கிற்று என்னும் இறும்பூதுக்கு இடமில்லாமல் போய் விட்டதல்லவா?

இத்தனை நேரமும் சிவகாமி ஒரு பக்கத்தில் நின்று ரதியைத் தடவிக் கொடுத்துக் கொண்டும், மெல்லிய குரலில் ஏதோ ஒவ்வொரு வார்த்தை சொல்லிக் கொண்டும் இருந்தாள்.

ஆயனர், சத்ருக்னர் இருவரும் சென்றதும், சக்கரவர்த்தி அவளருகில் வந்து, ஒரு பாறைமேல் உட்கார்ந்து கொண்டு, "சிவகாமி! உன்னிடம் ஒரு வார்த்தை சொல்ல வேண்டும், சற்று உட்கார்!" என்றார்.

ஏதோ அசந்துஷ்டியான விஷயந்தான் சக்கரவர்த்தி பேசப் போகிறார் என்று சிவகாமியின் உள்ளுணர்ச்சி கூறியது. எனவே, தலை குனிந்தபடி நின்று கொண்டேயிருந்தாள்.

"சிவகாமி! இந்தக் கத்தியைப் பார்!" என்றார் மகேந்திர பல்லவர்.

சிவகாமி ஆவலுடனும் பயங்கரத்துடனும் அதைப் பார்த்தாள்.

"சற்று முன்னால் இந்தக் கத்தியைப் பற்றி ஒரு விஷயம் சொன்னேனே, அது ஞாபகம் இருக்கிறதா, சிவகாமி!"

"இருக்கிறது, பிரபு!" என்று சிவகாமியின் உதடுகள் முணுமுணுத்தன. அந்தக் கத்தியானது மாமல்லரின் முதுகிலே பாய்வதற்கு இருந்தது என்ற எண்ணம் அவளை அவ்வாறு இரைந்து பேசும் சக்தியை இழந்து நாத் தழுதழுக்கச் செய்திருந்தது.

இதோடு, சக்ரவர்த்தி முதலில் எதற்காக அம்மாதிரி பொய்யைச் சொன்னார், இப்போது எதற்காக அதை மறுத்துச் சொல்கிறார் என்பதொன்றும் புரியாமல் சிவகாமி திகைத்தாள்.

"ஆம், சிவகாமி! உனக்குத் திகைப்பாகத்தான் இருக்கும். முதலில் எதற்காகப் பொய்யைச் சொன்னேன், இப்போது எதற்காக அதை ஒப்புக் கொள்கிறேன் என்பது உனக்கு ஆச்சரியமளிக்கும். ஆனால், உண்மையை உன் தந்தையிடம் சொல்வதற்குக் கூட நான் இஷ்டப்படவில்லை. அதற்காகத்தான் அவரைத் தெப்பத்தைத் தேடுவதற்கென்று அனுப்பினேன். ஆனால் உண்மை உனக்கு மட்டும் தெரிந்திருக்க வேண்டும்......"

சிவகாமியின் மனக் குழப்பம் இன்னும் அதிகமாயிற்று. என்ன உண்மையைச் சொல்லப் போகிறார்? அது எதற்காகத் தனக்கு மட்டும் தெரிந்திருக்கவேண்டும் என்கிறார்?

"சிவகாமி! எஃகிலேயே நஞ்சைக் கலந்து செய்த இந்தக் கத்தியானது, என் ஒரே மகன், பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்குரியவன், வீராதி வீரன். — மாமல்லனுடைய

முதுகிலே பாய்வதற்கு இருந்தது. இந்த அபாயம் யாரால் ஏற்பட்டது தெரியுமா?"

"பிரபு! அது பொய் என்றீர்களே?" என்று சிவகாமி நாக் குழறக் கேட்டாள்.

"எது பொய் என்கிறேன்? மாமல்லன் முதுகில் கத்தி பாய்வதற்கு இருந்தது பொய் இல்லை, சிவகாமி! சாம்ராஜ்யத்துக்கு அந்தப் பெரும் விபத்து நிச்சயமாக வருவதற்கு இருந்தது. அந்த விபத்து உன்னால் தடைப்பட்டது என்கிறேனே, அதுதான் பொய்! சிவகாமி! நீ கேவலம் சாதாரணப் பெண்களைப் போன்ற கோழை அல்ல. நெஞ்சுத் துணிவு உள்ளவள். ஆகையால்தான் உன்னிடம் உண்மையைச் சொல்கிறேன். மாமல்ல பல்லவன் நேற்று இந்த மண்டப்பட்டுக் கிராமத்திலே இந்த விஷக் கத்தியினால் பின்னாலிருந்து குத்தப்பட்டுச் செத்துப் போயிருக்க வேண்டும். இந்தப் பாறையடியில் இந்த மகிழ மரத்தடியிலேயே அவனுடைய உடல் அநாதைப் பிரேதமாக விழுந்து கிடக்கவேண்டும். அன்றொரு நாள் ஆலகால விஷத்தை உண்டு சகல உலகங்களையும் காத்த பரமசிவன்தான் நேற்றைக்கு மாமல்லனையும் பல்லவ குலத்தையும் காப்பாற்றினார்......"



நேற்று மாலை இருட்டிய பிறகு அதே பாறையடியில்தான் மாமல்லர் உட்கார்ந்து தன் செவிகளில் இணையற்ற காதல் மொழிகளைப் பொழிந்து கொண்டிருந்தார் என்பதைச் சிவகாமி நினைவு கூர்ந்தபோது, அவளுடைய தலை சுழல்வதற்கு ஆரம்பித்தது.

"சிவகாமி, கேள்! வாழையடி வாழையாக வந்த பல்லவ குலத்தில் மாமல்லனைப் போன்ற ஒரு வீர மகன் இதுவரையில் தோன்றியதில்லை. இந்தப் பரந்த பல்லவ ராஜ்யம் இன்றைக்கு மாமல்லனை நம்பியிருப்பது போல வேறு யாரையும் நம்பியிருந்ததும் இல்லை. அப்படிப்பட்டவன், நேற்றைக்கு இந்தப் பாறையடியில் வஞ்சகமாக நஞ்சு தோய்ந்த கத்தியினால் பின்னாலிருந்து குத்தப்பட்டுச் செத்து விழுந்திருப்பான். எத்தனையோ தவம் செய்து பெற்ற என் ஏக புதல்வனை நான் இழந்து விட்டிருப்பேன். பல்லவ சாம்ராஜ்யமே நாதியற்ற ராஜ்யமாகப் போயிருக்கும். கவிகளிலும் காவியங்களிலும் புகழ் பெற்ற காஞ்சி சுந்தரி வைதவ்யம் அடைந்திருப்பாள். இந்த விபத்துகள் எல்லாம் நேராமல் ஒரு மயிரிழையினால் தப்பியது. இவ்வளவும் நேர்வதற்குக் காரணமாயிருந்தது யார் தெரியுமா?......" என்று சக்கரவர்த்தி நிறுத்தி ஒரு பெருமூச்சு விட்டார். பிறகு கூறினார்:—

"நான் என் பிராணனுக்கு மேலாகக் கருதி யாரிடம் விசுவாசம் வைத்திருக்கிறேனோ, அத்தகைய என் பிராண சிநேகிதருடைய புதல்விதான்; ஆயன மகா சிற்பியின் மகள் சிவகாமிதான்!"

சிவகாமியின் உச்சந்தலையில் பளீரென்று ஒரு மின்னல் பாய்ந்தது. அந்த மின்னலிலிருந்து ஆயிரமாயிரம் ஒளிக் கிரணங்கள் கிளம்பி நாலா புறமும் பாய்ந்தன!



# ஆடல் பாடல்



கர்நாடகம்

சென்னைப் பிச்சைக்காரர்கள் நன்றாயிருக்கட்டும்; அவர்கள் கூட்டம் பெருகித் தழைக்கட்டும்; அவர்கள் வாழையடி வாழையாக வாழ்ந்து போகட்டும்.

சென்னைப் பிச்சைக்காரர்களின் பெயரால் சென்னையில் இன்னொரு சங்கீத விழா சிறப்பாக நடந்தது.

ஸ்ரீ வி. எல். நரசு அவர்களின் மற்றொரு ஜக்கி வாரிப் போடும் (பத்தாயிரம் ரூபாய்) நன்கொடையுடன் பெரு விழா டிசம்பர் 23உ ஆரம்பமாயிற்று. ஜனவரி 2உ வரையில் நடந்தது. சென்னைப் பிச்சைக்காரர்களுக்கு மொத்தத்தில் ரூபாய் இருபத்தாறாயிரம் சேர்ந்தது. அவர்கள் பாடு யோகந்தான். பணங் கொடுத்தவர்களும் யோகசாலிகளே. நல்ல நல்ல ஆடல் பாடல்களை அவர்கள் கண்டு கேட்டுக் களிக்க முடிந்தது.

கருணை விலாச சபையாரின் புதிய சபா மண்டபத்தில் நடந்த மேற்படி ஆடல் பாடல் கச்சேரிகளில், இரண்டு ஆடல் கச்சேரிகளைப் பற்றி இங்கே குறிப்பிட விரும்புகிறேன். டிசம்பர் 26உ யன்று நடந்த பந்தநல்லூர் ஜயலக்ஷ்மியின் பரத நாட்டியக் கச்சேரி ஒன்று.

• • •

நல்ல சிஷ்யன் கிடைப்பது குருவின் அதிர்ஷ்டம் என்று சொல்வார்கள். குமாரி ஜயலக்ஷ்மியைப் போல் பரத நாட்டியக் கலைக்குப் பெருமை யளிக்கக் கூடிய சிஷ்யையைப் பெற்றது பந்தநல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் அதிர்ஷ்டம் என்றே சொல்லத் தோன்றுகிறது.



சென்ற பத்து வருஷமாக எத்தனையோ பரத நாட்டியக் கச்சேரிகளை நான் பார்த்திருக்கிறேன். பரம்பரையாக ஆட்டக் கலை பயின்றவர்கள், புதிதாகக் கற்றுக் கொண்டவர்கள், பலருடைய கச்சேரிகளையும் பார்த்திருக்கிறேன்.

அவர்களில் எல்லாம் * நிருத்தக் கலையானது பந்தநல்லூர் ஜயலக்ஷ்மியிடம் மிகச் சிறந்து விளங்குகிறது.

ஸ்ரீமதி பால ஸரஸ்வதியின் அபிநயத்தைப் பார்க்கும்போது, "இதைக் காட்டிலும் நன்றாக யாரும் அபிநயம் பிடிக்க முடியாது" என்று எப்படித் தோன்றி விடுகிறதோ, அதுபோலவே ஜயலக்ஷ்மியின் நிருத்தத்தைப் பார்க்கும்போது, "இதை விட அழகாக யாரும் ஆடமுடியாது" என்று தோன்றுகிறது. அப்படி ஜயலக்ஷ்மியை விட உயர்வாக யாராவது நிருத்தம் ஆடக்கூடும் என்றால், அது நமது தொடர் கதையிலே வரும் சிவகாமியாகத்தான் இருக்கவேண்டும்! வேறு யாரும் இல்லை!

குமாரி ஜயலக்ஷ்மி துரிதகாலத்தில் ஜதிகள் ஆடும்போது, ஏதோ இந்திர ஜாலவித்தை பார்ப்பதுபோல் தோன்றுகிறது. கால்களும் கைகளும் அவ்வளவு விரைவாக இயங்குகின்றன. தரையிலே கால்கள் படுகின்றனவோ, இல்லையோ என்று கண்கள் சந்தேகப்படுகின்றன. ஆனால் தட், தட் என்று காதிலே விழும் சத்தம், பூமியிலே கால் விழுகிறது, அதுவும் அழுத்தமாக விழுகிறது என்ற நிச்சயத்தை நமக்கு உண்டாக்குகின்றன.

ஜயலக்ஷ்மி ஆடும்போது கணத்துக்குக் கணம் ஒரு புதிய சிற்ப வடிவத்தைப் பார்க்கிறோம். புதிய புதிய அழகிய ஜீவச் சிலை உருவங்கள் வாயுவேக மனோவேகத்தில் மாறி மாறி நம் கண் முன்னால் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன.

ஒரு நடனத் தோற்றத்தைக் கண்ணினால் பார்த்து மனத்தினால் கிரகிப்பதற்குள் இன்னொரு தோற்றம் வந்து விடுகிறது.

* பரத நாட்டியக் கலையில் அபிநயமில்லாத ஆட்டப் பகுதி 'நிருத்தம்' என்றும், அபிநயத்தோடு சேர்ந்த ஆட்டம் 'நிருத்யம்' என்றும் வழங்கப்படும்.

சில சமயம் ஜயலக்ஷ்மி ஆட்டம் ஆடுவதாகவே தெரிவதில்லை; பம்பரம் சுழல்வது போல் இருக்கிறது.


குமாரி ஹேமா மாலினி

"மான் குட்டியின் மருண்ட துள்ளலையும், மத்தகஜத்தின் மதோன்மத்த நடையையும், பெயர் பெற்ற அன்ன நடையையும், வன்ன மயிலின் நடையையும் சிவகாமியின் ஆட்டத்திலே பார்த்தார்கள்" என்று கூறியது ஜயலக்ஷ்மியின் ஆட்டத்துக்கும் பொருந்தும்.

இவ்வளவும் வெகு நுட்பமான தாள வித்தையோடு கலந்து, அபூர்வமான ஸ்வர சப்த ஜாலங்களோடு இணைந்து, மாறி மாறி நமது கண்முன் வருகிறபடியால், அலுப்பும் சலிப்பும் இல்லாமல் பார்க்க முடிகிறது.

ஆனபோதிலும், ஜயலக்ஷ்மியை ஆட்டி வைக்கும் ஸ்ரீ முத்தையாப் பிள்ளை முதலியவர்களுக்கு ஒரு எச்சரிக்கை செய்ய விரும்புகிறோம். பரதநாட்டியக் கலை சிறிது காலம் அடியோடு மங்கிப் போயிருந்து இப்போதுதான் மறுபடியும் பிரகாசமாகி வருகிறது. ஆகவே, நாட்டியம் பார்த்துப் பழக்கமே இல்லாதவர் புதிது புதிதாகப் பார்க்க வருவார்கள். பதவர்ணம் முதலியவைகளை அளவில்லாமல் நீட்டிக் கொண்டே போய் அவர்களை அலுப்படையச் செய்யக் கூடாது. "அடே அப்பா! ஒரு பத வர்ணம் ஆடும் நேரத்தில் ஒன்பது மரக்கால் நெல் குத்தி விடலாமே!" என்று சபையோர் சொல்லிக் கொண்டு போகும்படி செய்துவிடக் கூடாது. எந்த ஒரு தனி 'ஐட்ட'மும் அரை மணி நேரத்துக்கு மேல் போகாமல் பார்த்துக் கொண்டால் இந்தக் காலத்துச் சபைகளுக்குப் பொருத்தமாயிருக்கும்.

அபிநயக் கலையில் ஜயலக்ஷ்மி அடைந்திருக்கும் ஆற்றலும் அற்ப சொற்பமானதல்ல வென்பதைக் "கல்கி" தீபாவளி மலரில் நேயர்கள் பார்த்திருப்பார்கள்.

அபிநயப் பகுதியில், பின்னாலிருந்து ஜயலக்ஷ்மியின் தாயாரும் சகோதரியும் உயர்ந்த கர்நாடக சுத்தமான பாணியில் பாடிக் கச்சேரியைச் சிறப்பிக்கிறார்கள்.

சென்ற டிசம்பர் மாதத்தில் சென்னையில் குமாரி ஜயலக்ஷ்மியின் ஆட்டக் கச்சேரிகள் பல நடந்தன. ஒவ்வொன்றிலும் ரொம்ப நல்ல பெயர் வாங்கியதாக அறிகிறேன்.

வருங்காலத்தில் இன்னும் எவ்வளவோ நல்ல பெயர் வாங்கி, குரு ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளைக்கும் பரத நாட்டியக் கலைக்குமே ஜயலக்ஷ்மி புகழ் அளிக்கக் கூடுமென்று எதிர் பார்க்கிறேன்.

* * *

நான் குறிப்பிட விரும்பிய இன்னொரு நடனக் கச்சேரி ஜனவரி 2உ மேற்படி சுகுண விலாச சபை மண்டபத்தில் நடந்த குமாரி ஹேமா மாலினியின் கச்சேரி.

இந்தக் குழந்தை ஸ்ரீ வி. கே. விஜயராகவன் ஐ. சி. எஸ். அவர்களின் புதல்வி; காலஞ்சென்ற நீதிபதி ஸர் கிருஷ்ணனின் பேத்தி.

சென்ற தலைமுறையில் ஐ. சி. எஸ். காரர்கள் என்றால், சாதாரணமாகத் தங்கள் குழந்தைகளை ஐரோப்பிய நடை உடை பாவனைகளிலேயே பழக்குவார்கள். அவர்களுக்கு அளிக்கப்படும் கலைப் பயிற்சியும் ஐரோப்பிய ரகமாகவே இருக்கும்.

இந்தத் தலைமுறையில் நமது கர்நாடக சங்கீதத்தை வளர்ப்பதில் ஐ. சி. எஸ். காரர்கள் விசேஷ சிரத்தை எடுத்துக் கொள்வதைப் பார்க்கிறோம்.

இப்போது ஸ்ரீ விஜயராகவன் ஐ. சி. எஸ். தமது குமாரிகளுக்குப் பரத நாட்டியப் பயிற்சி அளிக்க முன் வந்திருக்கிறார். அதோடு இல்லை; அரங்க மேடையில் ஏறி ஆடவும் அனுமதித்திருக்கிறார்.

இந்த அதிசயங்களையெல்லாம் தூக்கி அடிக்கும் அதிசயம் என்னவென்றால், இந்தப் பத்து வயதுக் குழந்தை சொற்ப காலப் பயிற்சியில் அடைந்திருக்கும் அற்புதமான ஆட்ட அபிநயத் திறமைகள்தான்.

ஹேமா மாலினி, ஆட்டத்துக் கேற்ற அழகிய உடை தரித்து மேடையில் வந்து நிற்கும்போது, அலங்கரிக்கப்பட்ட அழகிய தந்தப் பதுமை போல் காணப்படுகிறாள்.

ஆனால், மேடையின் பக்கவாட்டில் தாளச் சத்தம் கேட்டதோ இல்லையோ, தந்தப் பதுமைக்கு ஜீவன் வந்து விடுகிறது!

கரு வண்டுகளையொத்த அகன்ற கண்களில் உயிர்க் கலையின் ஒளி பிரகாசிக்கிறது.

முகபாவத்திலும், கழுத்தின் அசைவிலும், ஆட்டத்திலும், எங்கிருந்தோ அதிசயமான சாகஸமும் லாகவமும் வந்து விடுகின்றன.

இந்தச் சின்னஞ்சிறு குழந்தை ஒரு அரிய கலையைக் கற்றுவிட்டோம் என்ற உணர்ச்சியினால், அவ்வளவு பெரிய சபையின் முன்னால் எவ்வளவு தன்னம்பிக்கையுடன் என்ன ஒய்யாரமாய், என்ன கம்பீரமாய் வந்து நிற்கிறாள் என்பதைப் பார்க்கும் போது மிக மிக வியப்பாயிருக்கிறது.

குடும்பம் மலையாளக் குடும்பம். வீட்டில் பேசுவது இங்கிலீஷூம் மலையாளமும். எனினும், நடனக் கலையிலுள்ள ஆர்வத்தினால் குமாரி ஹேமா, தமிழ் கற்று, தமிழ்ப் பாடல்களின் அர்த்தத்தை நன்கு உணர்ந்து, அதற்கேற்ப, மிகத் தேர்ந்த உலக அநுபவசாலியை யொப்ப அபிநயம் பிடிக்கிறாள். அபிநயத்துக்கு வேண்டிய முகபாவம், தெளிவு, குழைவு இவைகளுடன் அபிநயக் கலைக்கு முக்கியமாக வேண்டிய கண்களின் பார்வையை மிக நன்றாகப் பயின்றிருக்கிறாள். ஆங்காங்கு சக்தியும், வேகமும் வாய்ந்த அபிநய பாவங்களும் வருகின்றன. முக்கியமாக, "தந்தை தாய் இருந்தால்" என்ற பாட்டில், "உம்மை ஒருவன் கல்லால் அடிக்க" என்பதற்கு வரும் சக்திவாய்ந்த அபிநயம், இன்னும் என் கண் முன்னாலேயே நிற்கிறது. அச்சமயம் கல் நம்மீது விழுந்து விடுவதுபோலவே பிரமை உண்டாகி, நம்மை யறியாமல் கண்ணிமைகள் சட்டென்று மூடிக் கொள்கின்றன.

அபிநயப் பாட்டுக்களைத் தேர்ந்தெடுப்பதிலும், பாடுவதிலும் இன்னும் கொஞ்சம் சிரத்தை யெடுத்து ஏற்பாடு செய்தால், குழந்தையின் கலைத் திறமையைச் சபையோர் இன்னும் நன்றாக அநுபவிக்கலாம்.

இத்தகைய சீடப் பெண்ணைப் பெற்றதில் வழுவூர் ராமய்யாப் பிள்ளையும் நல்ல அதிர்ஷ்டசாலிதான்.

ஸ்ரீ விஜயராகவன் தம்பதிகள் எப்பேர்ப்பட்ட பாக்கியசாலிகள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. குழந்தைக்குப் பரதநாட்டியம் கற்பிக்க முன் வந்ததோடல்லாமல், குழந்தை கற்ற கலையை இவ்விதம் ஒரு சிறந்த தர்ம காரியத்துக்குப் பயன் படுத்தவும், அதைப் பலர் பார்த்து ரசிக்கும்படி செய்யவும் முன் வந்ததின் பொருட்டு அவர்களைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

# பாரதியார் ஞாபக நிதி

வரும் பிப்ரவரி 10உ யுடன் மேற்படி நிதி வசூலை முடிவு செய்யத் தீர்மானித்திருக்கிறது. ஆங்காங்கு நிதி வசூல் செய்யும் அன்பர்கள் கூடிய சீக்கிரம் வசூலான தொகைகளை அனுப்பிவைக்கக் கோருகிறோம்.

## ஜனவரி 17உ வரையில் வசூல்

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பி. கே. இருளப்பன், தேசி யவாள்கரை, அரிச வெள்ளாள, சிலோன் | 105 | 0 | 0 |
| ஸ்ரீமதி கே. எ. பி. எம். நாகம்மை ஆச்சி, நேமத்தான்பட்டி, இராமநாதபுரம் | 101 | 0 | 0 |
| ஸ்ரீ டி. என். நாராயணய்யர், டிரஸ்டி, "வனிதா சாரிடபிள் டிரஸ்ட்", சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ வி. வி. ஆர். என். ஏ. ஆர். நாகப்ப செட்டியார், புதுக்கோட்டை | 100 | 0 | 0 |
| இரண்டாம் இந்திய விமானப் படை தமிழன்பர்கள் (ஸ்ரீ எம். எம். சுப்பிரமணியம் மூலம்) | 77 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. சுந்தரம், கூத்தவாடி, சத்தாப்பூர் | 34 | 8 | 0 |
| ஸ்ரீ ஆர். ப்ரேம் குமார், கொல்லம் | 27 | 0 | 0 |
| ஸ்ரீமதி ஆர். பரமேஸ்வரி, கொல்லம் | 20 | 0 | 0 |
| ஸ்ரீமதி வஸந்தமதி C/o ஸ்ரீ எம். என். ராமஸ்வாமி பி. ஏ. பி. எல்., சேலம் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ கே. சச்சிதானந்தம், சென்னை | 25 | 0 | 0 |
| சோழவந்தான் போர்டு ஹைஸ்கூல் மாணவர்கள் (ஸ்ரீ ஏ. பாலகிருஷ்ணன் மூலம்) | 33 | 2 | 0 |
| ஆசிரியர்கள், மாணவர்கள் ஸ்ரீ சாரதா பாடசாலை, தியாகராயநகர் (ஸ்ரீ என். வெங்கடராமன் மூலம்) | 18 | 4 | 0 |
| ஸ்ரீ டி. எஸ். ராமச்சந்திரன், திருவல்லிக்கேணி, சென்னை | 16 | 0 | 0 |
| தமிழன்பர் மன்றம், பெரம்பூர் | 13 | 8 | 0 |
| ஸ்வாமி, ஆர். ஏ. எம்., கான்பூர் | 12 | 0 | 0 |
| ஸ்ரீ பி. ஏ. பாண்டியன், மதுங்கா, பம்பாய் | 11 | 0 | 0 |
| * மற்ற நன்கொடைகள் ரூ. | 165 | 7 | 0 |
| * அன்பர்கள் மூலம் வந்த நன்கொடைகள் ரூ. | 621 | 12 | 8 |
| ஏற்கெனவே வசூல் ரூ. | 20237 | 0 | 0 |
| ஆக மொத்தம் ரூ. | 21738 | 0 | 5 |

திருத்தம்:— 41-ம் பக்கத்தில் பம்பாய், ஸ்ரீ டி. எம். நடராஜன் ரூ. 2—0—0 என்பதை ரூ. 1—0—0 ஜாபிதாவில் சேர்த்துக் கொள்ளவும்; 14-1-45 இதழில் 41-ம் பக்கத்தில் ரூ. 3—8—0; ஸ்ரீ என். எஸ். ஆசீர்வாதம் ஐயர் என்று இருப்பதை ஸ்ரீ என். எஸ். அமிர்தம் ஐயர் என்று வாசிக்கவும்.

* விவரங்கள் அடுத்த இதழில்.

# வான சஞ்சாரம்

## இசைத் தேன்

தற்காலம் அதிக வியாபகமுள்ள நமது வயலின் வித்வான்கள் இருவரில் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை ஒருவர். பக்க வாத்தியமாயினும் தனிக் கச்சேரியாயினும் அவர் வாசிப்பதில் தனிப்பட்டதோர் குதூகலமிருப்பது ரஸிகர்கள் அறிந்ததே. 8உ திருச்சி நிலயத்தில் கேட்ட அவர் வயலின் கானம் வழக்கம் போல் ஜிலு ஜிலுப்பாயிருந்தது. பைரவி, சங்கராபரணம், அடாணா, பேகடா என்ற ராகங்களை வனப்பாய் வழங்கினார். உருப்படிகளில் வாசித்த ஸ்வரம் விறுவிறுப்பாயிருந்தது.

பி. எஸ். ராஜாவய்யங்கார் பாடுகிறார் என்றால் எனக்கு ரேடியோப் பெட்டியைப் பற்றிக் கொஞ்சம் கவலைதான். வெங்கலக் கடையில் யானை புகுந்தது போன்றது அவர் சாரீரம். மேல் ஸ்தாயியில் அது போகாத இடமில்லை. ஞானபாவமோ அதிகம். சாதகமோ அசாத்யம். 9உ சென்னையில் காபியுடன் தொடங்கி, கௌளை, பிலஹரி, தோடி, காம்போதி ராகங்களை வாரி யள்ளினார். தோடியில் சில விடங்களில் அடக்கிக் கூடப் பாடினார். 'வினதாசுதா' உருப்படியில் நிரவல் ஸ்வரங்கள் சரமாரியாய்ப் பொழிந்தன. கச்சேரி முடிந்ததும் மழை ஓய்ந்தது போலிருந்தது.

அன்று அதே நிலயத்தில் இனிமையும் கனிப்பும் சேர்ந்த குரலில் வி. இந்திரா தன்யாசி, கல்யாணி ராகங்களைப் பாடியதும், கல்யாணி உருப்படியில் கண்ட நிரவல் ஸ்வரமும் அனுபவிக்கத் தக்கவையாயிருந்தன.

11உ சென்னையில் பாடிய வி. சாரதாவுக்கு இனிய குரல். அனுயாசமான உதவு படி. பிர்க்காப் பொழிவு. ஆனால் உருப்படிகளில் ஸானிக்கும் அழகும் கண்டபோதிலும் ராகங்களில் கேதார கௌளை ஒன்றுதான் நல்ல சுகமாயிருந்தது. அன்று 7-15 மணிக்கு அதே நிலயத்திலிருந்து மதுரமாயிழையும் குரலில் சிற்சில இடங்களில் தனம்மாளின் வழியைச் சேர்ந்தது போன்ற கானம் காதில் விழுந்தது. பாடியது சரோஜினி என்று அறிந்தேன். முதல் பகுதிதான் கேட்க முடிந்தது. உருப்படிகள் சௌக்கியமாய் சமகங்களுடன் இழைந்து வந்தன. ராகம் ஏதும் பாடியதாகத் தெரியவில்லை.

12உ கச்சேரிகளில் சென்னையில் கேட்ட கே. வி. லக்ஷ்மியதும், எஸ். அனந்த கிருஷ்ணனதுமே மேன்மையாய்த் தென்பட்டன. முன்னவருக்கு இனிய குரல். நல்ல உதவுபடி. பிருகுடன் ராகப் பொழிவு. ஸாஹித்யத் தெளிவு. கஹரப்ரியா, வாசஸ்பதி, பிறராக் ராகங்களும் 'பக்கல நிலபடி' கிருதியும் வெகு ஜோராயிருந்தன.

அனந்தகிருஷ்ணனுக்குச் சற்று விரிந்த சாரீரம் போலும். ஆனால் நல்ல சாதகத் திறனான உதவுபடி. ஞானபாவத்துக்குக் குறைவில்லை. பிர்க்கா நிறைந்த மத்யமகால பிரு. தன்யாசி, சங்கராபரணம், சாருகேசி ராகங்களைத் திறம்படக் கையாண்டார். உருப்படிகளில் தாளக்கட்டும் கச்சிதமும் விசேஷம். ஆனால் பிர்க்காவில் கொஞ்சம் அடக்கமும் தெளிவும் தேவை.

தற்காலம் சங்கீத மேடைகளில் ஸ்ரீமதி சரஸ்வதிபாய் அதிகம் தென்படுவதில்லை. எனவே 13உ ரேடியோ புரோகிராமை ஆவலுடனேயே கேட்டேன். 1-15 மணி நேரம் புரந்தர தாஸரின் சரித்திரத்தை அழகாய்க் காலக்ஷேபம் செய்தார். ஆண்களுக்குத்தான் உரித்தது என்று ஒரு காலத்திலிருந்த காலக்ஷேபத்தைப் பெண்ணுக்கும் பாத்யதையுண்டு என்று முதல் முதலாய்ப் பதித்து வெளி வந்த தைரியசாலி யல்லவா? அநாயாசமாய் த்ரிஸ்தாயி பேசும் மதுரமான குரலில் ஆங்காங்கே தாஸரின் கிருதிகளைப் பொழிந்தார். கதையும் ரஸமாயிருந்தது. அவருக்குப் பிரத்யேகமான வாக்கிய ரீட்டல்களுக்கும் குறைவில்லை. கர்நாடக சங்கீதப் பயிற்சி முறையை ஸ்தாபித்த புரந்தரதாஸர் வடமொழியில் வித்பன்னராயினும், தம் தாய் பாஷையிலேயே ஏராளமான பாட்டுக்களைப் பாடித் தமது பக்தியை வெளிப்படுத்துவதுதான் உசிதமென்று கொண்டதை ஸ்ரீமதி சரஸ்வதிபாய் குறிப்பாய் எடுத்துக் காட்டியது விசேஷம்.






# பிரதிஜ்ஞை மு

## சக்கரவர்த்தி

தனஞ்சயனுடைய போர்த் தேர் பூமி அதிரச் சென்றது. காண்டீபத்தின் நாணொலியைக் கேட்ட கௌரவப் படையிலுள்ள வீரர்கள் நெஞ்சு பதைத்தது. சங்கமும் ஊதினான்.

“சேனையை நன்றாக அணிவகுத்துக் கொண்டு ஒன்றுகூடிக் கவலையாகப் போர்புரிய வேண்டும். அருச்சுனன் வந்துவிட்டான்” என்றார் துரோணர்.

துரோணருடைய கவலையும் மனக் கலக்கமும் துரியோதனனுக்குப் பிடிக்கவில்லை. “ஆட்டத்தில் தோல்வியடைந்த பாண்டவர்கள் காட்டில் பன்னிரண்டு வருஷமும் அதற்கு மேல் ஒரு வருஷம் யாவராலும் அறியப்படாமல் வசித்து முடிக்க வேண்டும் என்பது பிரதிஜ்ஞை. பதின்மூன்றாவது வருஷம் இன்னும் முடியவில்லை. அதற்கு முன்னதாக அருச்சுனன் அறியப்பட்டான். ஆதலால் நமக்கு என்ன பயம்? பாண்டவர்கள் எப்படியும் மறுபடி பன்னிரண்டு வருஷம் வனவாசம் செய்யப் போக வேண்டும். துரோணர் வீணாகப் பயப்பட்டுச் சாகிறார். இது பண்டிதர்களுடைய சுபாவம். பிறருடைய குற்றங்களைத் தேடி எடுத்துக் காட்டுவதிலேயே அவர்கள் எப்போதும் தங்கள் திறமையைக் காட்டுவார்கள். இவர்களைப் பின்புறத்தில் நிறுத்திவிட்டு நாம் முன்னின்று போரை நடத்துவோம்” என்று கர்ணனைப் பார்த்துச் சொன்னான். கர்ணனும் துரியோதனனுடன் சேர்ந்து, “இந்தச் சேனையிலுள்ள போர் வீரர்கள் போரில் மனத்தைச் செலுத்தாமல் பயத்தால் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். நம்மை நோக்கி வரும் தேரில் வில்லைப் பிடித்து நிற்பவன் அருச்சுனன் என்கிறீர்கள். அவன் பரசுராமனேயானாலும் நமக்கு என்ன பயம்? நான் ஒருவனே இவனைத் தடுப்பேன். துரியோதனனுக்கு நான் அந்தக் காலத்தில் செய்த பிரதிஜ்ஞையை இப்போது தீர்க்கப் போகிறேன். கௌரவ சேனையும் எல்லா வீரர்களும் சும்மா நின்றாலும் நிற்கட்டும். அல்லது, அவர்கள் மத்ஸ்ய ராஜனுடைய பசுக்களை ஓட்டிக் கொண்டு போகட்டும். நான் மட்டும் நின்று இந்தப் பார்த்தனை எதிர்ப்பேன்” என்று வீரியம் பேசினான்.

கிருபாசாரியர் கர்ணன் பேசியதைக் கேட்டு, “இது சுத்த மடத்தனம்” என்றார். “பார்த்தனை நாம் எல்லாரும் சேர்ந்தே எதிர்த்துப் போர் புரிய வேண்டும். நாம் அறுவரும் அவனை நான்கு புறத்திலும் சூழ்ந்துகொண்டால் தான் நாம் தப்புவோம். நீ தனியாகச் சாகசம் செய்யாதே” என்றார்.

கர்ணனுக்குக் கோபம் வந்துவிட்டது. “ஆசாரியாருக்கு அருச்சுனனைப் புகழ்வதில் எப்போதும் சந்தோஷம். அவனுடைய பலத்தை அதிகப்படுத்திக் கொள்ளுவதே இவருடைய வழக்கம். இது பயத்தினால் உண்டானது. அல்லது, சத்துருவினிடத்தில் அவருக்கு இருக்கும் அதிக அன்பினாலா என்பது எனக்குத் தெரியாது. பயந்தவர்கள் போர் புரிய வேண்டியதில்லை. சும்மா இருக்கலாம். எஜமானன் சோற்றை உண்ட நீங்கள் உங்கள் இஷ்டப்படி போகலாம். நான் இங்கே நின்று போர் செய்வேன். வேத மோதுகிறவர்களுக்கும் விரோதியைப் பாராட்டுகிறவர்களுக்கும் இங்கே என்ன வேலை?” என்றான்.

இவ்வாறு தகாத முறையில் ஆசாரியரைப் பரிகசித்ததைக் கேட்ட அசுவத்தாமனுக்குப் பொறுக்கவில்லை. அசுவத்தாமன் கிருபருடைய சகோதரி குமாரன். “கர்ணனே! நாம் இன்னும் பசுக்களைக் கூடப் பிடித்து ஹஸ்தினாபுரம் போய்ச் சேர்ப்பிக்கவில்லை. ஒரு காரியமும் செய்து முடிக்காமலேயே வீணான தற்புகழ்ச்சி பேசிக் கொண்டிருக்கிறீர்கள். நாங்கள் க்ஷத்திரியர்களல்ல: வேதம் ஓதுகிறவர்கள்தான். சாஸ்திரம் படிக்கிறவர்கள்தான். அரசர்களைச் சூதாட்டத்தில் ஜயித்து இராஜ்யம் அடையலாம் என்பதாக நான் படித்த எந்த சாஸ்திரத்திலும் சொல்லப்படவில்லை. போர் செய்து வெற்றி பெற்று ராஜ்யங்களை அடைந்தவர்களுங் கூடத் தங்களைப்






# முழங்குது

இராஜகோபாலாச்சாரியார்

புகழ்ந்து கொள்ளுகிறதில்லை. நீங்கள் என்ன காரியம் சாதித்து விட்டு இவ்வளவு பேசுகிறீர்கள்? நெருப்பு வாயைத் திறந்து ஒன்றும் பேசாமல் பதார்த்தங்களை மௌனமாகப் பக்குவம் செய்கிறது. சூரியன் பேசாமலே பிரகாசிக்கிறான். பூமியானது தன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசாமலே சகல சராசரங்களைத் தாங்குகிறது. சூதாட்டத்தால் ராஜ்யத்தைப் பெற்ற ஒரு க்ஷத்திரியனை எவன் புகழ்ந்து பேசுவான்? பறவைகளை மோசம் செய்து வலையில் பிடிக்கிற வேடனைப்போல் பாண்டவர்களுடைய ராஜ்யத்தைக் கவர்ந்தவர்கள் தற்புகழ்ச்சியில் இறங்காமலாவது இருக்க வேண்டும். ஏ! துரியோதனனே, ஏ! கர்ணனே, நீங்கள் எந்த யுத்தத்தில் பாண்டவர்களை வென்றீர்கள்? ஒற்றை ஆடை உடுத்தியிருந்த கிருஷ்ணையைச் சபைக்கு இழுத்து வந்தீர்களே, அவளை எந்த யுத்தத்தில் நீங்கள் ஜயித்தீர்கள்? மூடர்களே! வாசனையை விரும்பிப் பெரிய சந்தன மரத்தை வெட்டுகிற பாமரனைப்போல், கௌரவ குலத்தை வெட்டித் தள்ளினீர்கள். அன்று சூதாட்டத்தில் தாயக் கட்டையை வீசி இந்திரப்பிரஸ்தத்தைக் கவர்ந்ததுபோல் இப்போது பார்த்தனுடன் யுத்தம் செய்ய முடியாது. காண்டீபமானது 'நாலு,' 'இரண்டு' என்று பாச்சிகளை எறியாது. கூரிய அம்புகளை எறியும். அகம்பாவம் கொண்ட மூடர்களே! சபையில் சகுனியுடன் சேர்ந்து சூதாடினதுபோல் யுத்தத்தில் நடக்காது" என்றான்.

கௌரவ சேனைத் தலைவர்கள் பொறுமை இழந்து மாறுபட்டு இவ்வாறு வாதாடிக் கொண்டிருப்பதைப் பார்த்த பீஷ்மர் வருத்தத்துடன் பேசலானார்:

"மனிதனுக்கு ஐந்து பகைவர்கள் எப்போதும் இருக்கிறார்கள். அந்த சத்துருக்களுக்கு இடம் கொடுத்தவனுடைய புத்தியானது மயக்கம் கொள்ளும். அறிவுள்ள மனிதன் ஆசாரியனை அவமதிக்க மாட்டான். தேச காலங்களை நன்றாக ஆலோசித்து யுத்தம் செய்ய வேண்டும். அறிந்தோர்களும் தம்முடைய காரியங்களில் புத்தி தடுமாறுகிறார்கள். மகா புத்திசாலியான துரியோதனனும் நிற்பது தனஞ்சயன் என்று தெரிந்து கொள்ளவில்லை. கோபத்தினால் புத்தி தடுமாறுகிறான். அசுவத்தாமரே! கர்ணன் சொன்னது ஆசாரியருடைய ஆத்திரத்தை வளர்ப்பதற்காகவே என்று கொள்ள வேண்டும். நீங்கள் அவன் பேச்சைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். விரோதங்கள் பாராட்டுவதற்கு இது காலம் அல்ல. துரோணரும், கிருபரும், அசுவத்தாமரும் பொறுத்துக் கொள்ள வேண்டும். கௌரவ வீரர்களுக்கு ஆசாரியரான துரோணரையும் அவருடைய புத்திரர் அசுவத்தாமரையும் விட உலகத்தில் வேறு யாரிடத்தில் நான்கு வேதங்களும் க்ஷத்திரிய தேஜஸும் சேர்ந்தாப்போல் காண முடியும்? துரோணருக்குச் சமானமாகச் சொல்லக் கூடியவர் பரசுராமரைத் தவிர வேறு யாரைப் பற்றியும் நாம் கேட்டதில்லை. ஆசாரிய புத்திரர் பொறுத்துக் கொள்ள வேண்டும். உள் கலகத்துக்கு இது சமயமல்ல. பார்த்தனை நாம் அனைவரும் ஒன்று சேர்ந்தே வெல்ல முடியும். நமக்குள் கலகம் உண்டானால் தனஞ்சயனை எதிர்க்க முடியாது. இனி ஆகவேண்டிய காரியத்தைப் பற்றி யோசிப்போம்.

இவ்வாறு கௌரவப் பிதாமகரான பீஷ்மர் துரியோதனனையும் கர்ணனையும் கண்டித்துப் பேசியதும் கலகம் அடங்கிற்று.

பீஷ்மர் துரியோதனனைப் பார்த்து மறுபடியும் பேசலானார்: "ராஜேந்திரனே! தனஞ்சயன் வந்து நின்று விட்டான். நேற்றைக்கே பதின்மூன்று வருஷ காலமும் முடிந்து விட்டது. உங்கள் கணக்கு பிசகு. கால கதியையும், வருஷம், மாதம், பட்சம் முதலிய பிரிவினைகளையும் நன்றாக அறிந்த ஜோதிடர்கள் இதை விளக்குவார்கள். அதிக மாதங்களைக் கணக்கிட்டுக் கொண்டு ஏமாந்திருக்கிறீர்கள். இப்போது காண்டீபத்தை அருச்சுனன் ஒலிக்கச் செய்த

போது, பிரதிக்ஞையின் காலம் பூர்த்தியாகிவிட்டது. போர் தொடங்குவதற்கு முன்னால் மனத்தைச் சோதனை செய்து நிச்சயம் செய்து கொள்ள வேண்டும். துரியோதனனே! நீ பாண்டவர்களோடு சமாதானத்தை விரும்புகிறாயானால் அவ்வாறே செய்து கொள்ளலாம். தருமத்துடன் கூடிய சமாதானமா, போரா, எது உனக்கு விருப்பம்? முடிவாக யோசித்துச் சொல்!" என்றார்.

துரியோதனன், "பிரபுவே! நான் சமாதானத்தை விரும்பவில்லை. ஒரு கிராமத்தையுங்கூடப் பாண்டவர்களுக்குக் கொடுக்க மாட்டேன். போருக்கு வேண்டிய காரியங்களை அனுஷ்டிக்கலாம்" என்றான்.

அதன்மேல் துரோணர் உத்தரவிட்டார். "படையில் நாலில் ஒரு பாகத்தை அரசனை துரியோதனன் தனக்குக் காப்பாக அமைத்துக் கொண்டு விரைவாக ஹஸ்தினாபுரம் நோக்கிச் செல்ல வேண்டியது. மற்றொரு கால் பாக சைன்யம் பசுக்களை ஓட்டிப் போகட்டும். மீதி பாதிப் படையுடன் நாங்கள் ஐவரும் நின்று அருச்சுனனை எதிர்ப்போம். இவ்வாறு செய்வதே அரசனுக்கு க்ஷேமமாகும்" என்று சொன்னார்.

கௌரவ வீரர்கள் துரியோதனனைக் காப்பாற்ற அவ்வண்ணம் அணி வகுத்துக் கொண்டார்கள்.

* * *

அருச்சுனன், "உத்தரனே! அதோ காணப்படும் சத்துருப் படையில் துரியோதனனுடைய தேரைக் காணவில்லை. பீஷ்மர் கவசமணிந்து நிற்கிறார். துரியோதனனைக் காணவில்லை. இவர்களை விட்டு விலகி, துரியோதனனிருக்கும் இடத்துக்குத் தேரைச் செலுத்து. பசுக்களை ஓட்டிக் கொண்டு முன்னால் போகிறான் என்று எண்ணுகிறேன்" என்று சொல்லி அருச்சுனன் கௌரவச் சேனையை விட்டு விலகிப் பசுக்களையும் துரியோதனனையும் நோக்கி நேராகச் சென்றான். போகும்போது காண்டீபத்தை இழுத்து ஆசாரியர், பிதாமகர் இவர்கள் கால்களண்டை அம்புகள் மரியாதையாக விழும்படி செய்தான். அவர்களுக்கு அவ்வாறு வீர நமஸ்காரம் செய்துவிட்டுத் துரியோதனனை நோக்கிச் சென்றான்.

* * *

அருச்சுனன் பசுக் கூட்டம் இருந்த இடத்தை யடைந்து சுற்றியிருந்த படையைச் சிதற அடித்துவிட்டு இடையர்களை, "பசுக்களை உங்கள் இடைச்சேரிகளுக்குத் திருப்பி ஓட்டிக் கொண்டு போங்கள்" என்று சொல்லிவிட்டு, துரியோதனனைத் துரத்திக் கொண்டுபோனான். இடையர்கள் களியாட்டத்தோடு பசுக்களைத் திருப்பி ஓட்டிச் சென்றார்கள்.

அருச்சுனன் துரியோதனனையே நோக்கிச் செல்வதைக் கண்ட பீஷ்மர் முதலிய கௌரவ வீரர்களும் அவனைப் பின் தொடர்ந்து சென்று சூழ்ந்து கொண்டு அவன்மேல் அம்புகளை வருஷித்தார்கள். அருச்சுனன் அற்புதப் போர் நடத்தினான். முதலில் கர்ணனை எதிர்த்து அவனை யுத்த களம் விட்டு ஓடச் செய்தான். பிறகு துரோணரைத் தாக்கினான். அவரும் தோற்றார். அவர் பலம் இழந்து நிற்பதைக் கண்டு அசுவத்தாமனே புகுந்து அருச்சுனனை எதிர்த்தான். அப்போது அருச்சுனன் துரோணர் விலகிப் போவதற்கு மெதுவாக இடம் கொடுத்தான். அவரும் அதையறிந்து விரைவாக நீங்கித் தப்பினார். அருச்சுனன் பிறகு அசுவத்தாமனுடன் கடும் போர் புரிந்தான். அசுவத்தாமனும் சளைத்துப் போனபின், கிருபர் வந்து எதிர்த்தார். அவரும் தோல்வியடைந்தார். சேனை முழுவதும் சிதறியடிக்கப் பட்டு பயந்து ஓடிற்று.

இதைக் கண்ட பீஷ்மர், துரோணருக்கும் மற்றவர்களுக்கும் சொல்லி எல்லோரும் ஒன்று சேர்ந்து மறுபடியும் அருச்சுனனைத் தாக்க ஏற்பாடு செய்

தார். தன்னைச் சுற்றிப் பாணங்களை எறிந்து மலையைப் பனி மூடுவதுபோல் செய்து கொண்டு அருச்சுனன் அவர்களனைவரையும் பலமாகத் தாக்கினான். பீஷ்மரும் அருச்சுனனும் போர் செய்த காலத்தில் அதைப் பார்ப்பதற்குத் தேவர்களும் வந்து விட்டார்களாம்.

• • •

துரியோதனனையே நோக்கிச் செல்லும் அருச்சுனனை ஐந்து மகா ரதர்களும் ஒன்று சேர்ந்து சிறுத்தப் பார்த்தும் முடியவில்லை. அருச்சுனன் துரியோதனனை அடைந்து அவனைப் பலமாகத் தாக்கினான். துரியோதனன் தோல்வியடைந்து யுத்த களம் விட்டு ஓட ஆரம்பித்தான்.

"பெயரையும் புகழையும் இழந்து ஏன் ஓடுகிறாய்?" என்று அருச்சுனன் சொல்ல, மறுபடியும் துரியோதனன் சர்ப்பத்தைப் போல் சீறிக் கொண்டு திரும்பினான். பீஷ்மரும் மற்றவர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டு காத்துக் கொண்டே இருந்தனர். அருச்சுனன் அவர்களோடு நெடு நேரம் போர் புரிந்து முடிவில் மோகனாஸ்திரம் பிரயோகம் செய்து அவர்களனைவரையும் வீழ்த்தி அவர்களுடைய வஸ்திரங்களை யெல்லாம் கவர்ந்து கொண்டான். வஸ்திரங்களைப் பறிப்பதே அக் காலத்தில் முடிவான வெற்றியின் குறி. மயக்க மடைந்து வீழ்ந்த துரியோதனனுக்கு நினைவு வந்ததும் பீஷ்மர் அவனைத் தோல்வியை ஒப்புக்கொண்டு ஊருக்குத் திரும்பச் சொன்னார். சேனை முழுவதும் சிதறி யடிக்கப்பட்டு அஸ்தினாபுரம் திரும்பிற்று.

• • •

"உத்தரனே! குதிரைகளைத் திருப்பு! உன்னுடைய பசுக்கள் மீட்கப் பட்டன. பகைவர்களும் ஓடிவிட்டனர். ராஜகுமாரனே! சந்தனமும் புஷ்பமும் அணிந்து கொண்டு உன்னுடைய நகரத்துக்குள் புகுவாய்!" என்றான் அருச்சுனன்.

போகும் வழியில் வன்னி மரத்தில் மறுபடி ஆயுதங்களையும் துவஜங்களையும் முன்போல் வைத்து விட்டு அருச்சுனன் மறுபடி பிருகன்னளை வேஷம் தரித்துக் கொண்டான். குதிரைகளைத் தானே ஓட்டி உத்தரனைத் தேரில் உட்கார்ச் செய்தான். உத்தரன் ஜயித்தான் என்று நகரத்துக்குப் போய் கோஷிக்கும்படி தூதர்களையும் முன்னால் அனுப்பினான்.



# அதிசயக் குழந்தை

செ ஸுந்தரம்

வாலிபர்களில் சிலர், "நான் கல்யாணமே செய்து கொள்ளப் போவது கிடையாது. எனக்கு ஸ்திரீ வர்க்கத்தைக் கண்டாலே வேப்பங் காயாக இருக்கிறது!" என்பார்கள். அந்த வார்த்தைகள் பேச்சளவில்தான். அவர்கள் கண்களோ யார் என்ன புடவை கட்டிக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் புடவைக்கு ரவிக்கை பொருத்தமாக இருக்கிறதா என்றெல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்கும்.

இந்த ரகத்தைச் சேர்ந்தவன் அல்ல நம்முடைய ராமமூர்த்தி. அவன் காலேஜ் படிப்பு முடியும் வரையில் வைராக்கியத்துடன் இருந்தான். அவன் காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது எந்தப் பெண்ணையும் ஏறிட்டுப் பார்த்ததும் இல்லை.

அவன் எம். ஏ. படித்துத் தன் ஊருக்கு வந்த பிறகுதான் அவனுடைய வைராக்கியத்துக்குப் பங்கம் ஏற்பட்டது.

பட்டணத்திலிருந்து வந்து இரண்டு நாள் ஆயிற்று. அன்று காலை பத்து மணி இருக்கும். அவன் தன் அறையில் ஏதோ படித்துக் கொண்டிருந்தான். தகப்பனார் எங்கேயோ வெளியில் போயிருந்தார். அம்மா உள்ளே ஏதோ காரியமாக இருந்தாள்.

வாசல் கதவு திறந்தது. கலகலவென்ற வளையல் சத்தமும், "அம்மாமி! என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்ற குரலும் கேட்டது. ராமமூர்த்தி திரும்பிப் பார்த்தான். ஒரு பெண் உள்ளே வந்தாள். அவன் அப் பெண்ணைப் பார்த்துத் திகைத்துப் போனான். காலேஜில் எவ்வளவோ அழகிய பெண்கள் இருந்தும்—அவன் அவர்களைச் சரியாகப் பார்க்காததினாலோ என்னவோ—இது வரை அவனுக்கு எவ்விதக் கிளர்ச்சியும் உண்டானது இல்லை. ஆனால் இந்தப் பட்டிக்காட்டு அழகியைப் பார்த்ததும் அவனுக்கு அவள் யார் என்று தெரிந்து கொள்ள ஆவல் உண்டாயிற்று.

உள்ளே இருந்து வந்த அவன் அம்மாள், "என்னடி, விசாலம்! என்ன வேண்டும்" என்றாள்.

"தேங்குழல் படி வேண்டும்" என்றாள் விசாலம்!

"இங்கே வா!" என்று அவளை உள்ளே அழைத்துக்கொண்டு போனாள்.

திரும்பிப் போகும்போது அவன் பக்கம் திரும்பிய விசாலத்தின் முகம் நாணத்தால் சிவந்தது. வெளியிலே ஓடி விட்டாள்.

அவள் வெளியே போனதும், "அம்மா! அந்தப் பெண் யார்? புதிதாக இருக்கிறதே!" என்றான் ராமமூர்த்தி.

"யாரைக் கேட்கிறாய்? விசாலத்தையா? அவர்களை உனக்குத் தெரியாது. அவர்களும் இந்த ஊர் தான். என்றாலும் அவர்கள் வெளியூர்களில் வேலையாக இருந்தார்கள். இரண்டு வருஷங்களாகத்தான் இந்த ஊரில் இருக்கிறார்கள். விசாலம் அவர்களுக்கு ஒரே பெண்........." என்று சொல்லிக்கொண்டிருந்தவள், சட்டென்று அவன் முகத்தைப் பார்த்து விட்டு, "சரி; நான் போகிறேன். வேலையிருக்கிறது. வென்னீர் ஆறிப்போகிறது. நீ குளிக்கப் போ" என்றாள்.

ராமு குளிக்கச் சென்றான். விசாலத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்த அம்மா, சட்டென்று பேச்சை நிறுத்தி விட்டுத் தன்னைச் சந்தேகத்துடன் பார்த்ததை அவன் நினைத்துப் பார்த்தான். ஆனால் மறு கணம் அவனுக்கு விசாலத்தின் அழகிய முகம் ஞாபகம் வந்தது.

"அவள் மணமானவளா, இல்லையா? இல்லை என்றால் ஏன் ஆகவில்லை?" என்றெல்லாம் அவன் மனது எண்ணிற்று.

ஏதோ பெயருக்குச் சாப்பிட்டு விட்டு எழுந்தான். தன் மனப் போராட்டத்தை அம்மா தெரிந்து கொள்ளாதபடி இருக்க முயன்றான்.

அன்று சாயந்திரம் வழக்கம்போல் ஆற்றுக்கு உலாவக் கிளம்பினான் ராமமூர்த்தி. வாசலில் அவன் தாயார் குடத்துடன் நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது விசாலம் எதிர் வீட்டிலிருந்து குடத்துடன் வந்து கொண்டிருந்தாள். விசாலம் தன் அழகிய விழிகளால் அவனை ஒரு பார்வை பார்த்தாள். குடத்தை வைத்துக் கொண்டு நின்ற அவள் கைதேர்ந்த சிற்பி ஒருவன் சிருஷ்டித்த சிற்பம் மாதிரி இருந்தாள். அவளைப் பார்த்ததும் ராமமூர்த்தியின் மனதை என்னவோ செய்தது.

அவன் பக்கம் பார்த்த அம்மா, "ஏண்டா, நீயுமா ஆற்றுக்குக் கிளம்பிவிட்டாய்? நாங்கள் வந்த பிறகு நீ போகலாம்" என்றாள் சற்றுக் கடுமையாக.

"சரி" என்று உள்ளே வந்தான் ராமு.

மறு நாளையிலிருந்து அவன் அம்மாவும் விசாலமும் சாயந்திரம் மூன்று மணிக்கே ஜலத்துக்குக் கிளம்பி விடுவார்கள். அப்பொழுது ராமு தூங்கிக் கொண்டிருக்கும் சமயம். ராமுவுக்கு அம்மா ஏன் சாயந்திரம் ஆற்றுக்குப் போவதை நிறுத்தி விட்டாள் என்பது புரியவில்லை. அவன் விசாலத்தைப் பார்க்கக் கூடாது என்பதற்காகவே அப்படிச் செய்திருளோ என்று சந்தேகப் பட்டான்.

மறுநாள் மத்தியானம் அம்மா 'டிபன்' பண்ணிக் கொண்டு இருந்தாள். அவன் உள்ளே படுத்துக் கொண்டிருந்தான். சமையலறையில் பேச்சுக் குரல் கேட்டது. பேசுவது விசாலம் என்று தெரிந்து உள்ளே போனான். அவனைக் கண்டதும் அவன் தாயார், "ஏன்?" என்றாள்.

"இல்லை, அம்மா! தீர்த்தம் வேண்டும்!" என்றான் ராமு.



"அங்கே யிருந்து கூப்பிடக் கூடாதோ? அசட்டுப் பிசட்டு என்று காலைச் சுற்றாதே. நான் கொண்டு வந்து கொடுக்கிறேன், போ!" என்றாள் தாயார்.

ராமுவுக்கு ரொம்பவும் வெட்கமாய்ப் போயிற்று.

ஒரு நாளும் கடுமையாக இராத அம்மா தன்னிடம் அப்படிப் பேசியது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளைப் பார்க்கப் போனது அவளுக்குத் தெரிந்துதான் அப்படிச் சொன்னாள். அவன் செய்தது பிசகு என்று அவனுக்குப் பட்டது. ஆனால் விசாலத்தைப் பார்க்காமல் எப்படி இருக்க முடியும்? அவன் அறையில் உட்கார்ந்து இதைப் பற்றி எண்ணிச் சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கும்போது, தாயார் அவன் எதிரில் டிபனையும் காப்பியையும் கொண்டு வந்து வைத்தாள்.

"ராமு! உன் மனதிலிருப்பது எனக்குத் தெரியும். நீ விசாலத்தை அடியோடு மறந்துவிட வேண்டும். அது நமக்குச் சரிப்பட்டு வராது!" என்றாள்.

"ஏன்?" என்றான் ராமு.

"அவர்கள் குடும்பம் நல்ல குடும்பம் அல்ல; அவர்களுக்கு நல்ல பெயரும் இல்லை. விசாலம் கூடத்தைகூட. அவ்வளவு நல்லது இல்லை என்று கேள்வி! என்னவோ என்னை விடமாட்டேனென்று அந்தப் பெண் என் காலைச் சுற்றுகிறது. இங்கே வராதே என்றால் கூடக் கேட்கிற தில்லை" என்றாள்.

இதைக் கேட்டதும் அவனுக்கு உலகமே அஸ்தமித்து விட்டதுபோல் இருந்தது. "அப்படியா! நான் என்னமோ நினைத்தேன். அவள் குடும்பம் இவ்வளவு கேவலமா?" என்றான்.

"ஆமாம், ராமு! நீ அவளைக் கனவிலும் நினைக்காதே. உனக்கு இதைவிட அழகிய பெண்ணாகக் கிடைக்காதா?" என்றாள்.

அத்துடன் அவர்கள் பேச்சு முடிந்தது.

ராமுவிற்கு முன்னைவிட சஞ்சலம் இன்னும் அதிகமாயிற்று. விசாலத்தை எண்ணி எண்ணி ஓயாமல் ஏங்கித்தான்.



"விசாலம்! நீ இவ்வளவு துரோகியா? உனக்கு அழகைக் கொடுத்த தெய்வம் நல்ல குணத்தைக் கொடுக்கக் கூடாதா? உன்னைப் பார்த்து நான் ஏமாந்தேனே! நான் எவ்வளவு அசடாகப் போக இருந்தேன்?" என்று நினைப்பான். அவளைப் பற்றி அக்கம் பக்கத்தில் விசாரிக்க நினைத்தான். ஆனால், தன்னைப் பிறர் கேவலமாக நினைத்தால் என்ன செய்வது என்று மௌனம் சாதித்தான். அவளைப் பார்த்து, "ஊரில் சொல்வது எல்லாம் நிஜமா?" என்று கேட்டு விடலாமா என்று நினைப்பான். ஆனால் அவளைக் கேட்க நாம் யார் என்று சமாதானம் செய்து கொள்வான். இப்படி அவன் மனம் தத்தளித்தது. அவன் ஒருவருடனும் பேசுவது கிடையாது. எங்கேயாவது வேறு ஊருக்குப் போய் விட்டாலாவது அவளை மறக்க முடியும் என்று நினைத்தான். தன் மனதை அம்மாவும் அப்பாவும் அறியாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை வேறு. ஊரை விட்டுப் போகவும் மனம் இல்லை. இப்படியே நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

ஒரு நாள் ராமு எங்கேயோ வெளியே போய் விட்டு வந்தான். அம்மாவும் அப்பாவும் உள்ளே ஏதோ பேசுவதைக் கேட்டு ரேழியில் நின்றான்.

"நம் ராமுவை இங்கு வரவழைத்தது பெரிய ஆபத்தாக அல்லவா இருக்கிறது!" என்றாள் அவன் தாயார்.

"ஏன்?" என்றார் அவன் அப்பா ரகுபதி ஐயர்.

"எதிர் வீட்டு விசாலம் இருக்கிறாளல்லவா?" என்று ஆரம்பித்தாள் தாயார்.

"அந்த விஷயம் எனக்குத் தெரியும், ராமு! அவள் பேரில் என்ன குற்றம்? அந்தப் பெண் அழகைப் பார்த்து யார் தான் மயங்க மாட்டார்கள்?"

"நானும் அவன் அவளை நெருங்க விடாதபடி எவ்வளவோ தந்திரம் செய்தேன். பாவம், அவளைப் பற்றி வீண் அபவாதம் கூடச் சொல்லிப் பார்த்தேன். அப்படியாவது ராமு அவளைப் பற்றி நினைக்காமல் இருக்கட்டுமென்று. இதனால் அவன் வியாகூலம் அதிகமாயிற்றே தவிர வேறு பிரயோசனம் இல்லை. ராமுவும் அவன் அண்ணா மாதிரி ஆகிவிடாமல் இருக்க வேண்டுமே என்று கவலையாக இருக்கிறது. நமக்கு இருப்பது இந்த ஒரு குழந்தைதானே?"

தாயார் சொன்னதெல்லாம் ராமுவிற்கு ஏதோ புதிர் போடுவது போல் இருந்தது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் அவனுக்குத் தெளிவாயிற்று. அம்மா விசாலத்தைப் பற்றிச் சொன்னது வீண் அபவாதம் என்பதுதான் அது. அவ்வளவும் பொய்யா? அதுவே ராமுவுக்குப் பெரும் ஆறுதலாயிருந்தது. அவன் மனதிலிருந்த பெரும் பளு நீங்கியது. ஆனால், "அம்மா ஏன் அந்தப் பொய்யைச் சொன்னாள்?" என்று யோசனை பண்ணிப் பார்த்தான். அந்தச் சமயத்தில் உள்ளேயிருந்த அப்பா வெளியே வந்துவிட்டார். சுவர் ஓரத்தில் நின்று ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த ராமுவைப் பார்த்து விட்டு அவரும் நின்றார். "அப்பா! அம்மா விசாலத்தின் பேரில் ஏன் அவ்வளவு பெரிய பழியைச் சொன்னாள்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?" என்றான்.

"அதற்குக் காரணம் இதுதான்: விசாலத்தின் தமக்கையான சியாமளி என்பவள் ரொம்ப அழகியாம். அவளை அவள் தந்தை ஏராளமாகச் செலவழித்து நல்ல இடமென்று நம்பி ஒரு குடிகாரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார். அவன் அவளை ரொம்பக் கஷ்டப் படுத்தினான். கடைசியில் ஹிம்சை தாங்காமல்

சியாமளி துர்மரணத்தில் பிராணனை விட்டாள். அந்த ஏக்கத்தினால் அவர் விசாலத்தைக் கல்யாணம் செய்து கொடுப்பது இல்லை என்று வைராக்கியமாக இருக்கிறார். கிடைக்காத பெண்ணுக்காக நீ ஏங்கக் கூடாதென்று தான் அம்மா போய் சொல்லியிருக்கிறாள்" என்றார்.

ராமுவின் முகத்தில் கவலை குடி கொண்டது. விசாலம் களங்க மற்றவள் என்று அறிந்த சில நிமிஷங்களுக்கு முன் அவன் அடைந்த குதூகலம், அவளை அடைய முடியாது என்று அறிந்ததும் பறந்து போய்விட்டது. தகப்பனார் அவன் துக்கத்தைப் பார்த்தார். அவர் முகத்திலும் வருத்தம் குடி கொண்டது.

"ராமு! இப்பொழுது உனக்கு உன் அண்ணாவைப் பற்றிச் சொல்ல வேண்டும். நீ இப்பொழுது ஏங்குகிறதுபோல் தான் உன் தமையனும் ஒரு பெண்ணை நினைத்து ஏங்கினான். கடைசியில் அந்தப் பெண்ணை வேறு யாருக்கோ கல்யாணம் செய்து கொடுத்து விட்டார்கள். ஆகையால் அவனுக்கு உலகம் வெறுத்துவிட்டது. ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் எங்கேயோ போய்விட்டான். அந்த மாதிரி நீயும் போகக்கூடாதென்பதற்குத்தான்........." என்று கூறும் போதே அவருக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

"அப்பா! அம்மாதிரி அண்ணா செய்ததற்காக நான் வெட்கப் படுகிறேன். உங்கள் சுகத்தைவிட என் சுகம் பெரிதல்ல; இப்பொழுதே விசாலத்தை மறந்து விட்டேன்!" என்றான் ராமு.

விசாலத்தின் அப்பா ராமநாத அய்யரும், ரகுபதி அய்யரும் மிகவும் சினேகிதர்கள். இருவரும் ஓழிந்த வேளைகளில் ராமாயண பாராயணம் செய்வார்கள்.

அன்று வழக்கம் போல் ரகுபதி அய்யர், ராமநாத அய்யர் வீட்டுக்குப் போனார். அவர் திண்ணையில் சோர்ந்த முகத்துடன் இருந்தார். "என்ன விசேஷம்" என்றார் ரகுபதி ஐயர்.

"ஒன்றுமில்லை; எல்லாம் பகவான் திருவிளையாடல். அந்தப் பாவிப் பெண் கல்யாணத்திற்காக லக்ஷ்மணத் தேவனிடம் இரண்டாயிரம் ரூபாய் கடன் வாங்கினேன். அது மூவாயிரம் ஆகிவிட்டது. அதற்கு ஐயாயிரம் ரூபாய் நிலத்தை அடு வைத்தேன். அவன் இன்னும் நாலு நாளைக்குள் எல்லாப் பணமும் கொடுக்க வேண்டும் என்கிறான். என்ன செய்யப் போகிறேனோ தெரியவில்லை. பணம் கொடுக்காவிட்டால் பரம்பரை சொத்து அவன் வசம்தான்!"

அவர் குரல் கம்மியது. லக்ஷ்மணத் தேவன் அந்த ஊரில் பெரிய பணக்காரன். மகா போக்கிரி. கொலைக்குக் கூட அஞ்சாதவன். ரொம்ப முடைப் பட்டவர்களிடம் கடன் கொடுத்து அவர்களைக் குறித்த தேதியில் பணம் கொடுக்காவிட்டால், அவர்கள் சொத்தை எடுத்துக்கொண்டு விடுவான். அவனிடம் எதிர்த்துப் பேச முடியாது. அப்படிச் சேர்ந்ததுதான் அவன் நிலம், வீடு எல்லாம் என்று கேள்வி.

அதைக் கேட்ட ரகுபதி ஐயர், "இதற்குத்தானா கவலை? என்னவோ என்று பார்த்தேன். பணம் நான் தருகிறேன். உங்கள் சொத்தை மீட்டுக் கொள்ளுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட ராமநாத அய்யர், "உங்களுக்கு நான் என்ன பிரதி உபகாரம் செய்யப் போகிறேன்?" என்று உணர்ச்சி மிகுதியால் அவர் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

லக்ஷ்மணத் தேவனுக்குப் பணம் கொடுத்து நாலு நாள் ஆகிவிட்டது. ராமநாத ஐயரும் ரகுபதி ஐயரும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ரகுபதி அய்யரின் முகம் மிகவும் வாட்டமடைந்திருந்தது.

## வைத்தது வைத்தபடி!



கான்ஸ்டேபிள் (திருட்டு நடந்த வீட்டுக்கு வந்து):— அம்மா! இவன்தானா திருடன்?

அம்மாள்:— ஐயோ, இல்லையே! இவர் எங்கள் எஜமான். நீங்கள் தான், வைத்தது வைத்தபடி இருக்கட்டும் என்று டெலிபோனில் சொன்னீர்களே!

ராமநாத அய்யருக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் பக்கத்துக்கு என்ன காரணம் என்று விசாரித்தார்.

“உங்கள் வைராக்கியம் தளர வேண்டும். நான் உங்கள் நிலத்தை மீட்டுக் கொடுத்ததற்குப் பிரதி உபகாரமாக, உங்கள் பெண்ணை எங்கள் ராமுவுக்குக் கொடுத்து நீங்கள் என் குழந்தையை மீட்டுக் கொடுக்க வேண்டும்!” என்றார் ரகுபதி ஐயர்.

ராமநாத அய்யர், “நானே உங்களைக் கேட்க வேண்டுமென்று இருந்தேன். ராமு வந்ததிலிருந்து விசாலத்தின் மனதும் சரியாக இல்லையென்பது எனக்குத் தெரியும். நீங்கள் சம்மதிக்க வேண்டுமே என்று நினைத்தேன். நான் லக்ஷ்மணத் தேவனுக்குக் கொடுக்க வேண்டியது இரண்டாயிரம் ரூபாய் தான். அவன் கல்யாணத்தை இந்த சித்திரையில் முடிக்க வேண்டுமென்று முன்னமேயே தீர்மானித்துத் தான் இரண்டாயிரத்துக்கு மூவாயிரமாக உங்களிடம் வாங்கினேன். கல்யாணத்தை ஆயிரம் ரூபாயில் செய்து விடுகிறேன்” என்றார். ஐயரின் முகம் மலர்ந்தது.

இப்பொழுதெல்லாம் சாயந்திரம் விசாலம் ஆற்றுக்குப் போய் ராமுவோடு பேசுவது கிடையாது. அந்த நேரத்தில் இருவரும் வீட்டில் ஆசை மொழிகள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். குழந்தைகளின் சந்தோஷத்தைப் பார்த்து ரகுபதி அய்யர், “அடியே! உன் யோசனையின்படி நான் லக்ஷ்மணத்தேவனுக்கு ராமநாத ஐயர் ஊரை விட்டுப் போவதாக மொட்டைக் கடிதம் எழுதிய பிறகுதான் அவர் இவ்வளவு சுலபமாக வழிக்கு வந்தார்!” என்றார்.

“எல்லாரும் பிள்ளைக்கு வரதக்ஷிணை கொடுப்பார்கள். நாம் பெண்ணுக்குக் கொடுத்திருக்கிறோம். நமக்குப் பிறந்திருப்பது அதிசயக் குழந்தையல்லவா? ஆகையால் ஊரில் இல்லாத அதிசயமாக நடந்திருக்கிறது” என்றாள் தருமாம்பாள் சிரித்துக் கொண்டே.

## பரோபகாரி!



# பாலுவின் விருந்து!



— ராஜி —

"நாளைய தினம் வருஷாந்தரக் கொண்டாட்டம். பள்ளிக்கூடம் விடுமுறை" என்று தலைமை உபாத்தியாயர் சொல்லியதுதான் தாமதம். பையன்களெல்லாம் குதித்துக் கொண்டே வீட்டை நோக்கி ஓட ஆரம்பித்தார்கள். அப்பொழுது "சோனி பாலு!" என்று சில பையன்கள் கூப்பிட பாலு சற்று நின்று திரும்பிப் பார்த்தான். அவனுடைய சிநேகிதர்களாகிய கணேசன் கிட்டு, சங்கர், ராமு, சீனு முதலியவர்கள் பாலுவிடம் நெருங்கி, "பாலு! நாளைய மத்தியானம் நம் வகுப்பிலுள்ள பையன்களுக்கெல்லாம் ஓட்டப் பந்தயம் வைத்திருக்கிறார்களே! நீ உன் பெயரைக் கொடுத்து விட்டு வந்திருக்கிறாயா?" என்று கேட்டார்கள். அதற்கு பாலு "நீங்கள் கலந்துகொள்ளப் போகிறீர்களா?" என்று கேட்டான்.

"ஆமாம்! நாங்கள் யாவரும் கலந்து கொள்ளப் போகிறோம். தலைமை உபாத்தியாயரிடம் எங்கள் பெயர்களை இப்பொழுதுதான் கொடுத்து விட்டு வருகிறோம்" என்றார்கள். அதைக் கேட்ட பாலு, "இதோ நானும் என் பெயரைக் கொடுத்து விட்டு வருகிறேன்" என்று ஓடினான்.

அவன் போனவுடன் மற்றைய பையன்களெல்லாம் ஹோ, ஹோ என்று கைகொட்டிச் சிரித்தார்கள். "சோனி பாலு ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளப் போகிறானாம்!" என்றான் கிட்டு. "அவன் வகுப்பில் எல்லாவற்றிலும் முதல் மார்க் வாங்குவதால் பந்தயத்திலும் முதலில் வந்து விடலாம் என்று நினைக்கிறானோ?" என்றான் சங்கர். சீனு குறுக்கிட்டு "அவன் பணக்காரன் வீட்டுப் பையன். அவனை ஒன்றும் சொல்லாதீர்கள்" என்றான். "டேய், அவன் புத்திசாலி. சோனியாக இருந்தாலும் அவன் பந்தயத்தில் ஜெயித்து விடலாம்" என்றான் கணேசன். புத்தி சாலித்தனத்திற்கும், பந்தயத்துக்கும் என்ன சம்பந்தம் என்று மற்றப் பையன்கள் ஏககாலத்தில் கத்தினார்கள். அப்பொழுது பாலு திரும்பி வரவே சப்தம் அடங்கிற்று.

"பந்தயத்திற்கு என் பெயரைப் பதிவு செய்து விட்டு வந்து விட்டேன். நாளைக்கு எனது பிறந்த நாள். ஆதலால் வேடிக்கையாகக் காலத்தைக் கழிக்கலாம்" என்றான் பாலு. "பிறந்த நாளா? எங்களுக்கெல்லாம் ஏதாவது உண்டா?" என்று கேட்டார்கள் மற்றப் பையன்கள்.

"நாளைய தினம் என் வீட்டில்தான் உங்கள் யாவருக்கும் விருந்துச் சாப்பாடு. சரியாகப் பனிரண்டு மணிக்கு வந்து விடுங்கள். சாப்பிட்டு விட்டு அப்படியே பந்தயத்தில் கலந்து கொள்ளப் போகலாம்" என்றான் பாலு. "அப்படியே!" என்று சந்தோஷத்துடன் பாலு முதுகில் தட்டிக் கொடுத்து விட்டு மற்றப் பையன்கள் தங்கள் தங்கள் வீட்டிற்குப் போனார்கள்.

## தனக்கு வந்தால் தெரியும்!





மறு நாள் பாலு வீட்டில் ஒரே அமர்க்களமான விருந்துச் சாப்பாடு. ஜிலேபி, லட்டு, பாயஸம், பழ வகைகள், ஐஸ்கிரீம் எல்லாம் இருந்தன. தன் சிநேகிதர்களுக்கெல்லாம் பாலுவே உபசாரம் செய்து பரிமாறினான். பாலு தன் சிநேகிதர்களிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறான் என்பதை அன்றுதான் எலலோரும் அறிந்தார்கள்.

மணி இரண்டாகவே எல்லாப் பையன்களும் அவசரம் அவசரமாக பள்ளிக்கூடம் சென்றார்கள். ஓட்டப் பந்தயம் ஆரம்பிக்கப் போகிறது! பாலு, கிட்டு, சங்கர், சீனு, ராமு, கணேசன் எல்லோரும் வரிசையாக நின்றார்கள். சோனி பாலுவைப் பார்த்துச் சிரித்தார்கள் பலர். "இம் முறையும் கிட்டுதான் போன வருஷம் போல் பந்தயத்தில் முதலில்வரப் போகிறான்" என்றார்கள் சிலர்.

"ஒன்று, இரண்டு, மூன்று!" என்று தலைமை உபாத்தியாயர் சொல்லியது தான் தாமதம், பையன்கள் ஓட ஆரம்பித்தார்கள். அப்பொழுது என்ன ஆயிற்று தெரியுமா? பாலுவைத் தவிர மற்றப் பையன்கள் கொஞ்ச தூரம் ஓடியதும் மேலே ஓட முடியாமல் நின்று விட்டார்கள். கிட்டுவும் எவ்வளவு முயற்சி செய்தும் அவனாலும் முடியவில்லை.

எல்லோரும் ஆச்சரியப் படும்படி பாலு முதலில் வந்து பந்தயத்தை ஜெயித்தான். தலைமை உபாத்தியாயர் பெரிய வெள்ளிக் கோப்பையை அவனுக்குக் கொடுத்தார்.

கிட்டு, "பாலு! உங்கள் வீட்டில் விருந்து சாப்பிட்டதின் பலன் எங்களால் ஓட முடியாமல் போய்விட்டது!" என்று சொல்ல பாலு விஷமமாகச் சிரித்தான். அப்பொழுதான் மற்றப் பையன்களுக்குப் பாலுவின் விருந்தின் ரகசியம் தெரிந்தது.

அன்று பாலு தன் சிநேகிதர்களுக்கு உபசாரம் செய்து விருந்தளித்தானே தவிர தான் சாப்பிடவில்லை. தலைவலி என்று சிறிதளவு தான் சாப்பிட்டான்.

"ஓ! தான் நன்றாக ஓட வேண்டுமென்றுதான் பாலு தலை வலி என்று சாப்பிடாமல் இருந்து விட்டான்!" என்றான் சீனு. "நான் அப்பவே சொல்லவில்லையா? அவன் புத்திசாலி பந்தயத்தில் ஜெயித்து விடுவான் என்று" என்றான் கணேசன். பாலுவின் சாமர்த்தியத்தை யாவரும் மெச்சினார்கள்.

---

*சென்ற இதழ் பாப்பா மலரில் வெளியான திமுல் படப் புதிருக்கு விடை:*

*1. தாயார் குழந்தை வண்டியைத் தள்ளிக் கொண்டு போகிறாள். 2. தலைவாரிக் கொள்கிறாள். 3. காப்பி ஆற்றுகிறாள். 4. இளைஞன் பட்டம் விடுகிறான்.*

# காலக்ஷேபம்

### பார்க்க வேண்டியவர்!

மணி:—அப்பா! நேத்து யாரோ ஒரு உத்தியோகஸ்தர் வந்து இந்த ஊர் மிருகக் காலை யெல்லாம் பார்வை யிட்டாரப்பா.

தகப்பனார்:—அடாடா, எனக்கு அவர் வேண்டியவராயிற்றே. என்னை ஏன் வந்தவர் பார்த்துட்டுப் போகல்லே?

—பி. ஆர். சிவானந்தம்.



### ரொம்ப நியாயம்

புருஷன்:—என்டி, சல்லடை வேண்டும் போதெல்லாம் இரவல் வாங்கி வருகிறாயே! நமக்கே ஒன்று வாங்கி வரட்டுமா?

மனைவி:—வேண்டாம், வேண்டாம்! நம் வீட்டிலிருந்தால் இரவல் கொடுக்கத்தான் சரியா யிருக்கும். —பி. வி. அருணாசலம்.



### காரணம்

மானேஜர்:—ஏய் ப்யூன், என்னடா நீ தினம் வேலைக்கு லேட்டாக வருகிறாய்? இங்கே ஆபீஸ் எத்தனை மணிக்குத் திறக்கிறார்கள் என்று உனக்கு தெரியுமா?

ப்யூன்:—தெரியாதுங்க! நான் வரும் போதெல்லாம் ஆபீஸ் திறந்தே யிருக்குங்க.

—ஆர். வி. வரதராஜுலு.



### சுருட்டுப் பிடிக்காதே!

ஒரு அரண்மனையைப் பார்க்கவந்த சிலருக்கு ஒருவன் ஒவ்வொரு இடமாகச் சுட்டிக் காட்டி வந்தான்.

அவன்:—இப்பொழுது வெளியே போய்விடலாம். அரண்மனைக்குள் சுருட்டுப் பிடிக்க அனுமதிப்பதில்லை.

அவர்கள்:—நாங்கள் யாரும் சுருட்டுப் பிடிக்கவில்லையே.

அவன்:—இல்லை, ஆனால் இப்பொழுது எனக்குப் பிடிக்கவேண்டும்.

—வி. ராமமூர்த்தி.

### எசமான் சொன்னபடி!

காபி க்ளப் விட்டல் ராவ் தாம் கடனாகக் குப்பு ராவிற்குக் கொடுத்த பத்து ரூபாயை வசூலிக்க குப்புராவின் வீட்டிற்குச் சென்று அங்கு வாசலில் இருந்த வேலைக்காரனிடம், "டேய்! எசமான் உள்ளே இருக்கிறாங்களா?" என்று கேட்டார்.

வேலைக்காரன் (புதிதாக வந்தவன்):—நீங்க யாருன்னு முதலில் சொல்லுங்க!

விட்டல் ராவ்:—யாரா யிருந்தா உனக்கு என்னடா? நீ பதிலைச் சொல்லு!

வேலைக்காரன்:—பதில் மூணு இருக்குங்க! நீங்க இன்ஷூரன்ஸ் ஏஜண்டுன்னா எசமான் தூங்கறாரு! சீட்டாடும் சீனுவய்யர்னா எசமான் உள்ளே ரெடியாக் காத்துகிட்டு இருக்கிறாரு! காப்பி க்ளப் விட்டல் ராவுன்னா எசமான் வெளியே போயிட்டாரு!

—கே. நாகராஜ்



### பொருமை

குப்பன்:—என்னை மேஸ்திரி நேற்று வேலையிலிருந்து தள்ளிவிட்டான்.

கந்தன்:—உன்னை ஏன் வேலையிலிருந்து தள்ளினான்?

குப்பன்:—வெறும் பொருமைதான்! நான் வேலை செய்யாமலிருந்ததைக் கண்டு எல்லாரும் என்னை மேஸ்திரி என்று எண்ணிவிட்டார்களாம்! அதனால்தான்! —"நாந்"



### இன்னும் கஷ்டம்!

ஒரு இடத்தில் புதிதாக வீடு கட்டிக் கொண்டிருந்தார்கள். உயரத்தில் உட்கார்ந்து சுவர் எழுப்பிக் கொண்டிருந்த மேஸ்திரியின் செங்கல் உடைக்கும் ஆயுதம் தவறிக் கீழே விழுந்து விட்டதால் அவன் செங்கல்லைக் கையாலேயே உடைத்துக் கட்டிக் கொண்டிருந்தான்.

அந்த வழியே போன பாதசாரி ஒருவர் இதைக் கண்டு "என்ன ஐயா! செங்கல்லைக் கையால் உடைப்பது கஷ்டமா யில்லையா?" என்று கேட்டார்.

மேஸ்திரி:—கஷ்டம்தான்; ஆனால் செங்கல்லை வேறுவிதமாய் உடைப்பது இதை விடக் கஷ்டமா யிருக்கிறதே, என்ன செய்ய?

பாதசாரி:—அப்படியா? அது என்ன?

மேஸ்திரி:—பல்லால் கடித்து உடைப்பது மகா கஷ்டம்! —எம். ஆர். சரோஜா.

**கட்டுப்பாட்டு விலையினால்**

உற்பத்தியாளருக்கு நியாயமான விலை கிடைக்கும். சில்லறை வியாபாரிகளுக்கு நியாயமான இலாபம் கிடைக்கும். நீங்களும் எந்தப் பொருளையும் நியாயமான விலைக்கு வாங்கலாம்.

# மருந்து விற்பனைக் கட்டுப்பாட்டுக் கட்டளை நடத்தப்படும் முறை

ஒவ்வொருவரும் ஓரளவிற்கு மருந்துகள் வாங்குகிறார்கள். மருந்து விற்பனைக் கட்டுப்பாட்டுக் கட்டளையின் நுட்பங்களை நீங்கள் உணர்ந்துகொள்ளுவதனால் நீங்கள் உங்கள் பணத்தை மிச்சப்படுத்தலாம்.

அதன் விதிகளாவன :-

1. மருந்து வியாபாரிகள் விற்கும் 1700க்கு மேற்பட்ட வகை மருந்துகளும் சில்லறையிலும் மொத்தத்திலும் இன்னின்ன விலைக்கு அதிகப்படக்கூடாதென இந்தக் கட்டளை நிர்ணயிக்கிறது. இந்த ஜாபிதாவை விலைப்பட்டியலாக, டில்லி, சிவில் ஸப்ளை, பிரசுர மானேஜரிடம் 9 அணா விலைக்கு கிடைக்கும், தபால் செலவில்லை. இந்த ஜாபிதாவில் இல்லாத மருந்துகள் பொதுக் கட்டுப்பாட்டு விதிகளுக்கு உட்படும். யாராவது அவற்றிற்கு அதிக விலை சொல்லுவதாகச் சந்தேகித்தால் இந்த விதிகளின் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும்.

2. கட்டுப்பாட்டு விலையைவிட அதிகமாக விற்றாலும் தன்வசமிருக்கும் சரக்கை தகுந்த காரணமின்றி விற்க மறுத்தாலும் அந்த வியாபாரி குற்றஞ்செய்தவராகிறார். ரொக்கம் தந்து கேட்டால் அவர் கொடுக்கவேண்டும். இந்த விதியை மீறுபவர்கள் அபராதமோ சிறைத் தண்டனையோ விதிக்கப்படலாம்.

3. மாகாண அதிகாரியின் அனுமதிச் சீட்டின்றி யாரும் மருந்து வியாபாரம் செய்யலாகாது. இந்த அறிவிப்பிற்குக் கீழே காணப்படும் சின்னத்தையும் விலைப்பட்டியலையும் அனுமதிபெற்ற கடையில் முக்கியமானதோர் இடத்தில் கட்டித் தொங்கவிடவேண்டும்.

4. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியான மருந்துகளும் உள்நாட்டு மருந்துகளும் இந்தக் கட்டளைக்குட்படும்; ஆனால் யுனானி ஆயுர்வேத மருந்துகள் உட்படமாட்டா.




குறிப்பு :- இவ் விலைகளின்மேல் 100க்கு 5 வீதம் அதிகவிலைக்கு விற்கலாம். சங்கவரி முதலிய வரிகள் வசூலிக்கப்பட்டிருந்தால், ரசீதில் அவற்றைக் குறிப்பிடவேண்டும்.

மருந்துகள் வாங்கு முன்னதாக, உங்கள் வியாபாரியிடமுள்ள கட்டுப்பாட்டு விலைப் பட்டியலைக் கேட்டு வாங்கிப் பாருங்கள். விதிகள் மீறப்பட்டிருந்தால், கட்டுப்பாட்டு விலைப்பட்டியலில் குறிப்பிடப்பட்டிருக்கும் உங்கள் பகுதி லைசென்ஸிங் அதிகாரிக்கு அறிவிக்கத் தவறாதீர்கள்.

## உண்மையை உணர்ந்து உங்கள் உரிமையைக் கேளுங்கள்

நியூ டில்லி கைத்தொழில் சிவில் சப்ளை இலாக்கா வெளியிட்டது.

AAA 1210 A TM

# திருட்டு விற்பனை

# நீங்கள் தீர்மானித்தால் ஒழிந்துவிடும்

சாமான்கள் வாங்கும் பொது ஜனங்களின் ஒத்துழைப்பின்றி திருட்டு விற்பனை நடக்க முடியாது. பொது ஜனங்கள் ஒன்றாகூடி கட்டுப்பாட்டு விலைக்குமேல் கொடுக்க மறுத்துவிட்டால் திருட்டு விற்பனை நடத்துபவர்களுக்கு, இரண்டே வழிதான் உண்டு. ஒன்று ஓட்டாண்டியாகிவிடுவது. அல்லது நியாயமான விலைக்கு சாமான்களை விற்பனை செய்வது.

பொது ஜனங்களுக்கு இரண்டு தெளிவான வேலைகள் உண்டு. ஒன்று அதிக விலைகளை கொடுக்க மறுப்பது. மற்றொன்று திருட்டு விற்பனை செய்பவனைப்பற்றி சமீபத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனில் தெரிவிப்பது. இக்கடமைகள் பலவிடங்களிலும் நிறைவேற்றப்பட்டால் கொடிய சமூகக் குற்றவாளிகளில் ஒருவரான கொள்ளை லாபம் அடிப்பவர்களை எமது மத்தியிலிருந்து ஒழித்துவிடலாம். விலைகளும் குறையும். பொதுஜன ஒத்துழைப்பின்றி எவ்வளவு சட்டம் ஏற்படுத்தினாலும் நிலைமை அபிவிருத்தி அடையாது என்பதைத் தெளிவாய் உணருங்கள். கொள்ளைலாபமடித்தவர்கள் அநேக குற்றம் சாட்டப்பட்டுத் தண்டிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களைக் கண்டு நீங்கள் பயப்படவேண்டாம். உங்களைக்கண்டு அவர்கள் பயமடையும்படி செய்யுங்கள்

# திருட்டு விற்பனையை ஒழிக்க உதவுங்கள்

I AAA 1365 TM

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

சென்ற இதழில் "பதினொன்று ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடைகள்" என்று குறிப்பிட்டிருந்த ரூ. 251—6—2க்கு விவரம்:

| | | | |
|---|---|---|---|
| ஷண்முகானந்த பவன் சிப்பந்திகள், பழனி (ஸ்ரீ அப்பாத்துரை மூலம்) | 12 | 8 | 0 |
| பாரதி நூல் நிலையம், ஈரோடு | 12 | 8 | 0 |
| என். பி. லோகநாதன், எக்.எப். கண்ட்ராக்டர், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை | 12 | 0 | 0 |
| ஸ்ரீ டி. வி. வி. ஸ்வாமி, ஜவுளி வியாபாரம், ஈரோடு | 11 | 8 | 0 |
| நாகர்கோவில் பாரதி அன்பர்கள் (ஸ்ரீ நல்லபெருமாள் மூலம்) | 11 | 4 | 0 |
| செட்டியார் நல உரிமைச் சங்கம், காரைக்குடி | 11 | 0 | 0 |

ரூ. 10—0—0: ஸ்ரீ லக்ஷ்மிநாராயண அய்யர், சங்கீத வித்வான், தஞ்சாவூர்; தி இந்தியா போமன் பனவகாட் கம்பெனி, சென்னை; என். பி. எஸ். சுப்பிரமணியப் பிள்ளை, நுவரேலியா; பெரி. பழ. நாகப்பச் செட்டியார், கம்போலா, சிலோன்; எம். ஏ. சின்னய்யா, சிலோன்; கோயமுத்தூர், முனிசிபல் உயர்தர பாடசாலை பள்ளி பிறுதி வகுப்பு மாணவர்கள் (ஆர். ராமநாதன் மூலம்.)

ரூ. 9—2—0: தேசிய இளைஞர் சங்கத்தார், மகர்நோம்புச்சாவடி, தஞ்சாவூர்; ரூ. 6-0-0: ஸ்ரீ கே. சுந்தரம் ஐயர், நுவரேலியா; கஸ்தூரிபாய் தமிழ் நூல் நிலையம், பங்களூர். ரூ. 5—10—2: ஸ்ரீ ஏ. என். நாராயண ராவ், காரியதரிசி, பாரதி வாசகசாலை, பெரம்பூர்.

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் எம். டி. நெல்லையப்பன், சிலோன்; வி. ஜயராமன், நீலகிரி; என். பசுபதி, மதுரை; 'விஜயசாரம்' கழகம் தெப்பக்குளம்; இளைஞர் கலா நிகேதனம், பெரியகுளம்; என். கே. நடராஜன், சென்னிமலை; எம். பழனி, பள்ளி தேனியநூர்; துரையப்ப பாகவதர், சென்னை; என். ராமன், அம்பர்நதி; ஜி. நாகமாணிக்கம், தலைவர், ஆர்ய வைசிய வித்யா சங்கம், கோபிசெட்டிபாளையம்; கே. டி. கே. எஸ். மணி, பவானி; சி. பி. சான்திரி, எம். ஏ., கோடம்பாக்கம், சென்னை; ரூ. 4—0—0: ஸ்ரீமதி விசாலாட்சி அனந்தநாராயணன், கரூர்; ஸ்ரீ ஆர்.எம். சுப்பிரமணியன், ஸ்டேட் பிரஸ், புதுக்கோட்டை; ரூ. 3—3—0: ஸ்ரீ என். வாசுதேவன், பம்பாய்; ரூ. 3—2—0: ஸ்ரீ ராம பாலகான வினோத சபா இளைஞர் என். ஸ்ரீனிவாசன், குன்னத்தூர்; ரூ. 2—2—0: ஸ்ரீ பி.வி. கேசவலு, பம்பாய்.

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் வி. பி. நாயர், பதுளை, சிலோன்; மனேஜர், ஏ. ஜி. எஸ். ஏ. காதி வஸ்திராலயம், (உண்டியல் மூலம்) தஞ்சாவூர்; டி. இ. சுப்பிரமணிய அய்யர், கொச்சி; டி. எம். நடராஜன், பம்பாய்; கே.பி. முத்தம்பலம், நல்லாகுளம்; பி. நாகப்பன், சித்தோடு; என். பி. சுப்பிரமணியம், பூவானூர்; ஏ. ஜி. வி. சுப்ரமணியன், பவானிப்பூர்; எம். சுந்தரராஜன், அருப்புக்கோட்டை; டி. சேதுராமலிங்கம், தலைவர், ஸ்ரீ பாரதி வாலிபர் சங்கம், மண்டித்தோப்பு; ஆர். அர்ச்சுனன், திருவல்லிக்கேணி; ரூ. 1—5—0: ஸ்ரீ ஏ. ரங்கநாதன், பார்க் டவுன், சென்னை; ரூ. 1—2—0: வி. நாசிநாரய்யர், திருக்காரன்குடி.

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஜு. குப்புஸ்வாமி, பெஜவாடா; ஆர். ஸ்ரீநிவாசன், பம்பாய்; ஜயலட்சுமி, கரூர்; கே. செல்லையா, சக்கம்மான்புரம்; வி. ஏ. சுப்பிரமணியம், மதுரை; பால்சாமி, மதுரை; சதாசிவம், மதுரை; தில்லையம்மாள் சதாசிவம், மதுரை; கேரா கோசி பியூல் எலிப்பியம், சிலாபம், சிலோன்; என். வி. ராமஸ்வாமி, சென்னை; கே. எஸ். ஸ்ரீநிவாசன், சென்னை; கே. நடராஜன், பூவாநிருதுநகரம்; டி. எஸ். கோபால கிருஷ்ணன், பொள்ளாச்சி; எஸ். லக்ஷ்மணன், எழும்பூர்; சுப. சித. பழனியப்பன், சென்னை.

சென்ற இதழில் "அன்பர்கள் மூலம் வந்த நன்கொடைகள்" என்று குறிப்பிட்டிருந்த ரூ. 1693—10—3க்கு விவரம்:

கொழும்பு, ஸ்ரீமான்கள் நா. ஆறுமுகம், ஆ. குருஸ்வாமி மூலம்:

ரூ. 25—0—0: ஸ்ரீ மா. நாராயணசாமி; ரூ. 11—0—0: ஸ்ரீமான்கள் ஆ. குருஸ்வாமி, நா. ஆறுமுகம், ஆ. ரா. செ. நி. ஆறுமுகம், பொ. சிவாநாகம்; ரூ. 7—0—0: ஸ்ரீ சொ. மு. ராம. ராமலிங்கம் பிள்ளை; ரூ. 6—0—0; ஸ்ரீமான்கள் எஸ். ஏ. எஸ். எம். மாரிமுத்து நாடார், செ. முருகையா பிள்ளை, பி. சுப்பய்யா.

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் ஆர். ராமசாமி செட்டியார், ச. ராமசாமி செட்டியார், எம்.பி. சாமிக்கி அப்பு அன் கோ., ஜூ. ச. ச. ஞான தேசிகன் கோ., க. ந. & நி. ஆ. கம்பெனி, என். கோபால்சாமி செட்டியார், குமார விலாஸ் ஹோட்டல், உடுப்பி லாட்ஜ், செ. க. ஆறுமுகம் செட்டியார் அன் கோ., ஜே. கே. சுந்தரசாமி செட்டியார், எஸ். வி. குருஸ்வாமி, கே. வி. நவநீதம், எம். வேலாயுதம், டி. எஸ். எஸ். குருஸ்வாமி செட்டியார், கே. வி. அய்யாஞ்சாமி செட்டியார், ஏ. கே. எம். தேவராய பிள்ளை, எஸ். சிவசுப்ரமணியம், ஜெ. ஏப்ரகாம், எம். எம். முத்தையா பிள்ளை, எஸ். சங்கரப் பிள்ளை, ஆர். கதிரேசன், ஆர். தங்கவேலு, பி. கருப்பண்ணன், எஸ். கே. நடராஜன், எஸ். பி. ராஜகோபால்தாஸ், செ. சின்னய்யா ஆசாரி, கே. மாரியா பிள்ளை, த. சின்னசாமி, சோ. ம. லெட்சுமணன், ஜி. ஆனைக்குட்டி, சோ. ஆறுமுகம், ஆறு. முத்தையா பிள்ளை, டி. ஆர். கிருஷ்ணன்.

ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் செ. கருப்பையா, குகன் கபே, ஆ. முருகானந்தம், செ. குலசேகரன் பிள்ளை, எஸ். பொன்னையா, இம்மானுவேல் பெர்னுன்டோ, க. வெள்ளையஞ் செட்டியார், எம். பி. எம். முத்துகுமாரசாமி செட்டியார், ஆர். எம். எஸ். நாராயணசாமி நாயுடு, மு. மருதன் செட்டியார், வி. சின்னத்துரை, சிவசிதம்பரம், எஸ். டி. எம். ஜம்புலிங்கம், சிதம்பரம், பெரி. வெள்ளைச்சாமி, செ. பழநியப்பன், ஏ. வீரப்ப பிள்ளை, ஆர். எம். நடராஜ பிள்ளை, ஏ. பொன்னுத்துரை.

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் பி. தியாகராஜன், ப. அருணாசலம் பிள்ளை, எஸ். ஏ. சுப்ரமணிய பிள்ளை, சி. பி. என். நாயர், ஆர். மருதய்யா, ஆர். வரப்பிரகாசம், சி. முத்துசாமி செட்டியார், கணபதி செட்டியார், ஜூ அமிபானி, அ. குப்புசாமி, ஜே. எஸ். கொரேரா, ஏ. பி. சி. வீரபாகு, அ. முருகையா, கரு. சொக்கலிங்கம் பிள்ளை, குமாரவேல் கம்பெனி, கே. முத்துச்சாமி, கே. பி. கே. கடலையாண்டி செட்டி, எஸ். எஸ். என். கடலைமுத்து செட்டியார், ஏ. பி. என். சுப்பையா செட்டியார், கே. எம். டி. தேவராய பிள்ளை, எம். ஆர். எம். தைநாம் பிள்ளை, வி. சுந்தையா, பி.

சாரி, கே. பட்டாபிராமன், கே. என். வேதநாராயணன், டி. கதிர்வேலு, டி. எ. சீனிவாசன், ஏ. வி. ராஜாமணி, ஏ. கலியாண சுந்தரம், எஸ். சட்டநாதன், பி. எஸ். பரசுராமன், என். வி. சுப்ரமணியன், ஆர். சௌரிராஜன், எஸ். சுவேனசன், ஆர். சீதாராமன், டி. என். சீனிவாசன், கே. எம். கணபதி, 130 ரஸ்தாப்பேட், எம். கிருஷ்ணமூர்த்தி, என். பார்த்தசாரதி அய்யங்கார், டி. ஆர். சீனிவாசன், என். ராமகிருஷ்ணன், என். சீனிவாசன், எம். கன்னையா, ஜோசப் பீடர், முத்துவேலு, எஸ். எஸ். சடகோபன்; ரூ. 67—4—0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 216—0—0

வீரவநல்லூர், பி. சங்கரநாராயண பிள்ளை மூலம்:

ரூ. 9—0—0: ஸ்ரீமான்கள் சு. கடலைமுத்து பிள்ளை, அ. ச. ஜெயமாலைப்பர்ணுந்து மூலம்; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் எஸ். செல்லப்பெருமாள் பிள்ளை, ந. ஆழ்வார் முதலியார் சன்ஸ், கோ. ப. சு. மணியம்; ரூ. 4—8—0: ஓ. 982. செங்குந்தர் நெசவாளர் கூட்டுறவு சங்கம் குமாஸ்தாக்கள்; ரூ. 4—0—0: ச. சு. சங்கர சுப்பிரமணியம் செட்டியார்; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் ஆ. மு. ஆறுமுக முதலியார், டாக்டர் கே. சபாபதி, அ. ச. ஜெயமாலை பர்ணுந்து, டி. ஜி. மயிலேறும்பெருமாள், 1-ம் வ. பழனியாண்டி அடவியார், ஏ. ஜாய்சி பிரதர்ஸ், ம. செ. ஆசைமிக்கேல் முதலியார், கே. கணபதியா பிள்ளை, சு. பிச்சைக்கண்ணுக் கரையாளர், சீவியாபுரம் எஸ். சன்வாஸ மூர்த்தி, ஆர். ரத்தினம், பூ. சங்கரநாராயண பிள்ளை; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் வி. சோமசுந்தரம் செட்டியார், வி. கைலாஸம் செட்டியார், க. வி. பூ. சங்கரவேலாயுதம் செட்டியார், இ. ப. சிவலிங்க முதலியார், சு. பி. அண்ணாமலை செட்டியார், டி. கணபதி, ரு. சுப்பையா பிள்ளை, மு. சுப்பாமூயக் கரையாளர், என். கே. ராமசுப்பய்யர், ஜ. த. சு. நா. முத்தையா முதலியார், பூ. பண்டார முதலியார், ரு. கிருஷ்ணசாமி நாயுடு, ரு. லெக்ஷ்மண நாயுடு, ரு. குமாரசாமி நாயுடு, ஆர். ரெங்காச்சாரி, எம். ஏ. அபூபக்கர், உ. மீ. கணபதியப்ப பிள்ளை, ம. பாப்பு பண்டிதர், உ. சொக்கலிங்கம் பிள்ளை, என். மகாராஜ பிள்ளை, திருப்புடைமருதூர் எ. கோபாலகிருஷ்ணன், என். வேலு செட்டியார், என். வன்னமுத்து பிள்ளை, கே. சங்கரய்யர், மு. பிச்சக்கண்ணுக்கரையாளர், முத்துசாமிக் கவிராயர், மா. ராமசாமிக் கோனார், எல். என். கே. சன்ஸ் ஆர். ஆர். சுப்பாமூமன், புதுக்குடி ஏ. ராமன், மு. சுப்பையா பிள்ளை, கோபால்சிங், சு. வேலுசுப்ப நாயுடு, ரு. முத்தய்யா தேவர்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. என். சுப்பையா, த. பி. ராமசாமி முதலியார், வெ. சண்முகத் தொண்டைமான், அ. அருணாசலத் தொண்டைமான், சு. கணபதி மேஸ்திரியார், அரிகேசவநல்லூர் அ. ரு. ம. சேது மேஸ்திரியார், கே. வேலாயுதம் செட்டியார், கா. மேகலிங்கம் பிள்ளை, க. சுப்பையா செட்டியார், வி. அ. ரு. அருணாசலம் செட்டியார், அ. ரு. சுப்பையா செட்டியார், வெள்ளக்குளம் செ. ராமய்யா நாயுடு, வெள்ளக்குளம் வெ. சங்கர நாயுடு, கோ. செ. கிருஷ்ணய்யர், சீ. சுப்பையா பிள்ளை, எஸ். கஸ்தூரிரெங்கன், வி. பூமிலிங்கம் செட்டியார், அரிகேசவநல்லூர் சீ. பாடகலிங்கம் செட்டியார், எம். கே. ரெங்கநாதய்யர், இ. ப. ஆறுமுக முதலியார், வே. பாடகலிங்கம் செட்டியார், பி. அருணாசலம் பிள்ளை, சு. நாரியண பிள்ளை, ஆ. வன்னியப்பன் அடவியார், எம். ரெங்கநாதய்யர், 5-ம் சு. பிச்சையா அடவியார், ச. சுந்தரசாமி செட்டியார், 4-ம் த. சன்வாசமூர்த்தி அடவியார், 4-ம் த. கண்ணடவியார், சி. முகம்மது காசிம்ராவுத்தர், அம்பை லெக்ஷ்மி எம்போரியம் வேலாயுதம், களக்காடு கே. வி. சுப்பிரமணிய அய்யர், என். வி. சுந்தரமய்யர், வி. பிச்சைக்கண்ணுராவுத்தர், வி. சி. எஸ். கடலைமுத்துப் பிள்ளை, பி. கனகசபாபதி, சு. பி. சங்கரலிங்கம் செட்டியார், வி. ராமகிருஷ்ணன், பி. சங்கரன், ஆ. சுந்தரசாமி செட்டியார், சி. ப. பழனிச்சாமி முதலியார், என். ஆர். ராமச்சாரி, அ. கு. ராம. சி த. வன்னிநாயகம் செட்டியார், சு. கண்ணு செட்டியார், என். பி. கிருஷ்ணன், 2-ம் மே. ம. முத்துக்கண்ணு அடவியார், 1-ம் மே. அ. சுப்பிரமணியம், 3-ம் வ. பா. முத்துக்கண்ணு அடவியார், மானேஜர் ஆர். நாராயணய்யங்கார், வி. சண்முகசுந்தரம் பிள்ளை, சு. காந்திமதிநாதன் செட்டியார், ரு. பிரமநாயகம் பிள்ளை, ரா. வேலுத்தேவர், ந. தெய்வேயப்பன், வி. பி. நாராயணன், த. சுப்பையா செட்டியார், பூ. சுப்பிரமணிய முதலியார்; 0—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 201—0—0

வீரவேலன், டிக்கோயா, ஸ்ரீ வேல்மயில் நாடார் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் மு. ராம. துரைச்சாமி செட்டியார், சு. த. முத்து நாடார் அண் பிரதர்ஸ், பெ. சீ. செ. செல்லமுத்து பிள்ளை; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் பே. தங்கப்பனம் நாடார், ந. சந்தனம் நாடார், ப. வேல்மயில் நாடார், போ. துரைபாண்டி நாடார், பெ. துரைராஜ் நாடார், பெ. துரைபாண்டி நாடார், கா. ராசையா, மு. செல்லையா பிள்ளை; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் ச. பேர்ம்பம் நாடார், மு. திருமணி நாடார், ப. மாணிக்க நாடார், போ. நவமணி, நா. சு. பசுபதி பிள்ளை, ரு. ச. பொன்னையா, பெ. கிருஷ்ணசாமி, அ. பாலுசாமி நாயுடு, சு. ப. அழகப்பன், செ. கரு. கருப்பையா அண் கோ., நா. பொன்னம்பலம், செ. ரு. ரெங்கசாமி உடையார், அ. மு. அ. முத்தையா தேவர், ரு. மு. ம. ப. மு. சோமசுந்தரம் செட்டியார், கா. வைரவன், வி. அ. ரத்தினம்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஆறுமுகநாடார், ரு. காசிநாடார், ஏ. திருமால் நாடார், பெ. செல்லதுரை நாடார், சு. சுப்பையா நாடார், தங்கப்பனம் கடலையாண்டி ஆச்சாரி, சு. மு. அய்யம்பெருமாள் ஆச்சாரி, பெரியசாமி பிள்ளை, நா. சு. பரமசிவம் பிள்ளை, ஆ. பொன்னையா, மு. சுந்தையா, செ. செல்லையா, கோவிந்தராஜ், கொப்பாண்டி, ம. அ. திரு. செ. மு. அண் கோ., நா. சுப்பிரமணியம், கனகரத்தினம், கிருஷ்ணு அண் கோ., இ. கா. ஆறுமுகம், மு. கனகரத்தினம், ஸ்ரீராம ஜெயம் அண் கோ., பெ. சிதம்பரம், மு. நாகலிங்கம், வி. வ. சு. மாசானமுத்து நாடார், மு. ரு. ராஸ் அண் கோ, ஏ. பெ. பெரியசாமி நாயுடு, சேனுதிராஜா, பெ. ராமசாமி, வெ. துரைச்சாமி செட்டியார்.

ஆக ரூ. 101—0—0

கல்கி, ஸ்ரீ ஏ. ராஜகோபாலன்-ஜி. வெங்கடராமன் (டைம எக்ஸ்ப்ளோரேஷன் பாக்டரி) மூலம்:

ரூ. 5—4—0: ஸ்ரீமான்கள் ஏ. ராஜகோபாலன்; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் ஜி. வெங்கடராமன், என். ச. பார்த்தசாரதி; ரூ. 3—0—0: ஸ்ரீமான்கள் வி. ராம அய்யர், என். என். சேஷன்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் ஏ. கே. லக்ஷ்மிநாராயணன், இ. ஜோ. முதலியார்,

கே. என். ரத்னசாமி, வெங்கட்டரங்கன், கே. ஏ. சுந்தரம், ஆர். பாலசுப்ரமணியன், வி. நாகராஜன், ஓர் அன்பர், ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. கோபாலன், பி. கே. சேஷன், பி. பரசுராம், கே. ஏ. மோகனவேலு, டி. செல்வகேசவன், ஆர். பி. அய்யர், எம். நரஸிம்மன், வி. சுப்பராயலு, ஜி. சுப்ரமணிய அய்யர், எம். ரங்கநாதன், வி. சேஷாத்திரி, டி. வி. கணபதி, ஏ. பார்த்தசாரதி, பி. வி. பாலகிருஷ்ணன், என். ஸ்வாமிநாதன், டி. ஆர். வெங்கடராமன், பி. என். ஆர். கிருஷ்ணன், வி. பரமேஸ்வர அய்யர், கே. ஏ. சாக்கோ, என். சத்தியவாகீஸ்வரன், டி. என். நாகரத்தினம், என். சாரநாதன், ஒரு அன்பர்; ரூ. 0-12-0: ஒரு ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 61—0—0

புதுச்சேரி, ரோடியர் மில்ஸ் வேர்ஹவுஸ், ஏ. கே. கேசவன் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் கிருஷ்ணமாச்சாரி, சுப்ரமணியம், சதாசிவம், கண்ணன், பி. எம். வேலு பிரதர்ஸ்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் என். கோவிந்தசாமி, கே. வி. சாமி, குருசாமி அய்யர், அருணாசலம், அண்ணாமலை, ராஜகோபால், பி. கோவிந்தசாமி பிள்ளை, ஏ. கே. கேசவன், மாணிக்கம், என். பெரியசாமி, என். வீராசாமி, நாராயணன், என். ரங்கநாதன், பெருமாள், ரா. திருவேங்கடம், அ. ந. இராமச்சந்திரன், கிருஷ்ணசாமி, பி. தங்கவேலு: ரூ. 29—13—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 57—13—0

அரவங்காடு. அக்கௌண்ட்ஸ் ஆபீஸ், ச. என். கோபாலகிருஷ்ணன் மூலம்:

ரூ. 5—5—5: ஓர் அன்பர்; ரூ. 2—5—5: ஸ்ரீ ச. என். கோபாலகிருஷ்ணன்; ரூ. 2—2—3: ஸ்ரீமான்கள் ஓ. என். லக்ஷ்மணன், என். வெங்கிடராமன்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் ஓ. என். கோபாலகிருஷ்ணன், என். வி. நாராயணன், பி. நாகஸ்வாமி, என். ராமாநுஜம், என். எம். சுந்தரம்: ரூ. 1—8—0: ஸ்ரீ பால்ராஜ். ரூ. 1—1—1: ஸ்ரீமான்கள் ஜி. என். ராகவன், டி. கே. ரெங்கன்: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வி. பி. ரெத்தினம், திருவேங்கிடம். டி. கே. ரெத்தினம். பி. ஆர். சுப்ரமணியம், என். என். செட்டி. கே. வி. பி. சாரதி. பி. தியாகராஜன், டி. ஆர். நீலகண்டன், ஆர். எம். நரசிம்ஹன், கே. வி. கார்த்திகேயன், வி. சாம்பசிவன், வி. என். ஆர். கிருஷ்ணன், என். நாராயணராவ், ஆர். நரசிம்ஹன், கே. என். குனத்து, வி. ஆர். ராஜம், என். தேசிகாச்சாரி, கே. ரெத்னசாமி, பி. வி. கே. மூர்த்தி, ஜி. என். கே. மூர்த்தி. என். வி. துரைசாமி, ஏ. ஏ. கிருஷ்ணன், என். டி. சுப்ரமணியம், என். சஞ்சீவிராமன், என். ஜயராம ஐயர், கே. தேஜடி, எம். கணேசன், வி. ஸ்ரீனிவாஸன், மிஸ் கல்யாணி கிருஷ்ணு, ஒரு அன்பர், ஒரு அன்பர். ரூ. 0—4—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை. (மணியார்டர் கமிஷன் 0—15—6 நீங்கலாக)

ஆக ரூ. 56—0—0

சங்கரநாராயணர்கோவில், கல்வி ஏஜன்டு ஸ்ரீமதி என். எம். பிரேமு அம்மாள் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் வி. ச. மு. சங்கர பாண்டிய முதலியார், ஸ்ரீமதி என். எம். பிரேமு அம்மாள், என். ஷண்முகம் பிள்ளை, என். தெய்வ சிகாமணியா பிள்ளை, ஏ. சீதாராமய்யர், என். எம். கே. பாலசுப்ரமணியம்; ரூ. 3—0—0: பி. ப. ப. முத்துசாமி செட்டியார்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் நித்தியானந்த முதலியார், பி. வெங்கடாசலமையர்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ப. குருசாமி செட்டியார், ச. ராமலிங்க தேவர், ஏ. எஸ். என். என். என். சங்கர பாண்டிய நாடார் & சன்ஸ், பி. கருப்பையா பிள்ளை, கே. ஏ. ஏ. நல்லய ராஜா, வே. து. சாமுவேல் செட்டியார், கு. கணபதி செட்டியார், என். செல்லமய்யர், என். தவசிநாதன், அ. மாணிக்க வாசகம் செட்டியார், பி. எம். ராக்கப்பத் தேவர், பி. வடிவேல் பிள்ளை, தி. பா. திருநாவுக்கரசு முதலியார் சன்ஸ், டி. என். சாமி நாயக்கர்.

ஆக. ரூ. 51—0—0

கொழும்பு, க. ஆ. வடிவேலன் செட்டியார் மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீ சிவகுருநாத பிள்ளை; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் க. ஆ. வடிவேலன் செட்டியார், எ. சோமசுந்தரம், இ. சுப்பையா பிள்ளை, ச. சங்கரலிங்கம் பிள்ளை, ஆ. சண்முகம் பிள்ளை, என். செல்லையா பிள்ளை, என். ஜூர்த்துமரியார் பெர்னாந்து, என். எம். இபுராகிம் சாகிபு, ம. சுந்தரம் பிள்ளை, தி. துரையப்பா பிள்ளை, க. சுந்தரசாமி, என். குருஸ்வாமி, அ. மு. மந்திரத் தேவர், இ. ராமஸ்வாமி பிள்ளை; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் மு. மகாராஜ பிள்ளை, மு. ஆறுமுகம், மு. சண்முகசுந்தரம் பிள்ளை, எம். செல்லப்பா பிள்ளை, என். எம். பெர்னாந்து, என். ஆசிய மூர்த்தி, விக்டோரியா பர்னாந்து, எ. அப்துல் சலாம், கே. இலங்கமணி பிள்ளை, கே. நல்லகண்ணு பிள்ளை, வா. மகாராஜ பிள்ளை, ம. வயிரவன் பிள்ளை, பீட்டர் பர்னாந்து, என். முனியஸ்வாமி பிள்ளை, பே. சின்னையா பிள்ளை, கே. ஆர். கணேசன், ஆ. கு. வேலாயுதம் பிள்ளை, என். ரோசி பர்னாந்து, ஸ்ரீமதி தங்கம்மாள்.

ஆக ரூ. 50—0—0

"கல்கி" அச்சுத் தோழர்கள் நன்கொடை:

ரூ. 3—5—0: ஸ்ரீ ஆதிகேசவலு; ரூ. 3—4—0: ஸ்ரீ மணவாள நாயுடு; ரூ. 2—12—0: டி. கே. ராம்ஸாமி: ரூ. 2—8—0: ஆர். அப்பாலு; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் சென்னியப்பன், வீரராகவன்: ரூ. 1—8—0: ஸ்ரீமான்கள் பி. வரதராஜன், நடராஜன், சென்னப்ப நாயுடு, துரைசாமி நாயுடு, சுப்பராயலு, வரதன், என். டி. முத்து: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் என். சிவலிங்கம், எம். நாராயணசாமி நாயகர், டி. அப்பமுத்து, என். இ. மாணிக்கம், என். ராஜகோபாலன், ஏ. கோவிந்தராஜுலு, என். ஆறுமுகம், கே. முருகன், வி. கணேசன், என். குணசேகரன்.

ஆக ரூ. 36—5—0

அறந்தாங்கி, ஜனாப் ஏ. கரீம் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ஏ. என். ஓ. சின்னையா பிள்ளை, ஜி. சீனிவாசம் பிள்ளை, ஆர். சோமசுந்தரம் பிள்ளை, டி. என். ஏ. கலந்தர் மைதீன் ராவுத்தர், என். தர்மராஜ், டி. மாணிக்கம் செட்டியார், பி. ஆறுமுகம் செட்டியார், என். ஜி. நாராயணசாமி நாயுடு, வி. பெரியய்யா பிள்ளை, வி. எம். சீனிவாசன், என். கலந்தர் ராவுத்தர், என். எம். நடராஜன், ஏ. கரீம், என். வீரச்சாமி, ஆர். பூபதி, ஏ. நாராயணசாமி நாயுடு, பி. கோவிந்தசாமி, என். சுப்பிரமணிய அய்யர், என். சுப்பையா, வி. வி. ஜி. வெங்கடேச நாயுடு, பி. ஏ. கரீம், ஜி. என். ராஜன், என். கோவிந்தராஜ், வி. எம். நடராஜநாடார், வி. கிருஷ்ணசாமி அய்யர், டி. என். மணியன், என். முருகையன், என். என். ஏ. காசிம், ஓ. நடேச பிள்ளை, எம். வயித்திலிங்கம் பிள்ளை, ச. கே.

ரூபாய்க்குட்பட்ட நன்கொடை. (மணியார்டர் கமிஷன் 0—4—0 நீங்கலாக.)

ஆக ரூ. 12—12—0

உதகமண்டலம், டி. கே. ராமசாமி செட்டியார் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ ஈஸ்வரன்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் சேது நரசிம்மன், எம். பி. சாமி, ஜி. நாகராஜன், எஸ். பி. சிவராஜ், கே. ராஜகோபால், கே. நஞ்சாகவுடர், டி. கே. ராமசாமி செட்டியார், ஆர். பத்ரமேல் அண்ட் கோ., கே. சின்னதம்பி பிள்ளை அண்ட் சன்ஸ், ஒரு அபிமானி; ரூ. 0—4—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 12—4—0

இலங்கை, செந்நபுரா, ஸ்ரீ அ. க. தேவன் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் வீர. கட்டையப்பன் சேர்வை, ஆ. பெரியசாமி, எஸ். வி. தியாகராஜா, சொ. சின்னையா, மு. ஆறுமுகம், உ. ல. கணபதி, வில்ஸன் ஜே. எ. டி.; பெரி. ராமசாமி செட்டியார், ரூ. 2—0—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக. ரூ. 10—0—0

காரைக்குடி, ஏ. ஐ. எஸ். ஏ. காதி வஸ்திராலயம், நிர்வாகி மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் சோ. லக்ஷ்மணன், கி. சுப்பய்யா; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் டி. நடராஜன், பி. கே. கருப்பையா, கெ. தங்கப்பன், எஸ். ரவிகுலம்; ரூ. 1—0—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 9—0—0

மதுரை, மதுரை மில்ஸ் லிமிடெட், கே. வி. ராமன் பி. ஏ. மூலம்:

ரூ. 1—8—0: ஸ்ரீ கே. வி. ராமன்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. ராமரெத்தினம், என். கணபதி அய்யர், என். ராமஸ்வாமி அய்யர், வி. ஆறுமுகம், வி. சுப்பய்யர் பி. ஏ., கே. வெங்கட ஸ்ரீனிவாசன்; ரூ. 0—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக. ரூ. 8—0—0

மதுரை, கல்வி ஏஜன்டு, ஏ. ஷண்முகசுந்தரம் பிள்ளை மூலம்.

ரூ. 3—0—0: ஸ்ரீ எம். முத்திருளப்பக் கோனார்; ரூ. 2—0—0: ஸ்ரீ வெங்கட்டராமய்யர்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. லெக்ஷ்மண அய்யர், என். வேலுப் பிள்ளை;

ஆக ரூ. 7—0—0

விசாகப்பட்டணம், தேவல் லோகல் ஆடிட், ஆர். பார்த்தசாரதி மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ செ. பா. ஸாரதி; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ரா. வே. ரமணன், சுப்ரமண்யம், வெ. ராஜு; ரூ. 1—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 6—8—0

கல்கி, அம்பூலிஷன் பாக்டரி, என். வி. நடராஜன் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் எஸ். சத்யமூர்த்தி, ஆர். கிருஷ்ணன்; ரூ. 4—6—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 6—6—0

செய்துங்கநல்லூர், கே. நாராயணய்யங்கார் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ கே. நாராயணய்யங்கார்; ரூ. 1—0—0: எம். கே. ஹரிஹரய்யர், என். வெங்கிட கிருஷ்ணய்யங்கார், பி. சுந்தரராமய்யர், எல். கிருஷ்ணன்.

ஆக ரூ. 6—0—0



# படித்துப் பார்!

## மகா கவி பாரதியார்

[ஆசிரியர்: வ. ரா.; பிரசுரம்: சக்தி காரியாலயம், சென்னை; விலை: ரூபாய் மூன்று.]

தமிழ் நாட்டில் பாரதியாருக்கு ஞாபகச் சின்னம் அமைப்பது பற்றிப் பேச்சும் காரியங்களும் நடந்து வருகின்றன.

பாரதியாருக்கு 'நடமாடும் ஞாபகச் சின்ன'மாகத் தற்சமயம் தமிழ் நாட்டில் இருந்து வருகிறவர் ஆசிரியர் வ. ரா. அவர்கள். அல்லும் பகலும் அனவரதமும் பாரதி ஞாபகமாகவே இருந்து வருகிறவர்; பாரதியின் பெருமையைத் தமிழ் மக்கள் உணரச் செய்வதையே தமது வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக் கொண்டவர். அத்தகையவர் எழுதிய புத்தகம் இது.

தற்சமயம் தமிழ் நாட்டில் உள்ள எந்த எழுத்தாளரையும் விட ஒரு வகையில் ஸ்ரீ வ. ரா. பாக்கியம் செய்தவர். ஸ்ரீ பாரதியாரை நேரில் பார்த்துப் பேசிப் பழகியவர்.

தாம் நேரில் பார்த்து அறிந்த சம்பவங்களையும், கேட்டு அறிந்த நிச்சயமான சம்பவங்களையும் வைத்துக் கொண்டு மகா கவி பாரதியாரின் வாழ்க்கையைப் பற்றிய இந்த அரிய நூலை நமக்கு அளித்திருக்கிறார்.

"பாரதியாரை நேரில் பார்த்துப் பழகக் கொடுத்து வைக்கவில்லையே!" என்ற வருத்தம் நம்மில் பலருக்கு உண்டு. இந்தப் புத்தகத்தைப் படித்தால் அந்தக் குறை பெரும்பாலும் தீர்ந்து விடும்.

அப்படி, பாரதியாரின் வாழ்க்கையை வ. ரா. படம் பிடித்து நமக்குத் தந்திருக்கிறார். உண்மையில், "வாழ்க்கைச் சித்திரம்" என்று சொன்னால் இதுதான் என்று சொல்லும்படி எழுதியிருக்கிறார். படிக்கும்போது பாரதியாரே நம் கண் முன்னால் வருகிறார். அவருடைய வாழ்க்கைச் சம்பவங்கள் பலவும் நம் கண் முன்னால் நடைபெறுகின்றன.

* * *

வ. ரா. வின் தமிழ் நடையின் வன்மை நாம் நன்கு அறிந்ததே. அந்த நடை வன்மையானது இந்த நூலில் உச்ச நிலையையடைந்திருக்கிறது.

வ. ரா. வுக்கு பாரதியார் மகா கவி; மகா வீரர்; மகா தேசபக்தர்; மகாத்மா. ஏன்? வ. ரா. வின் தெய்வமே பாரதியார்தான் என்று சொல்லி விடலாம். எனவே, வ. ரா. வின் தமிழ் நடை இந்த நூலில் உன்னதம் அடைந்திருப்பதில் ஆச்சரியம் என்ன? வேகமாகவும், ஆவேசமாகவும், சக்தியுடனும், சாதுர்யத்துடனும், அழகாகவும், அற்புதமாகவும் எழுதியிருக்கிறார். இப்படியெல்லாம் அவர் எழுதுவதற்கு வேறென்ன விஷயம் இதைக் காட்டிலும் சிறந்ததாகக் கிடைக்கப் போகிறது?

* * *

பாரதியாருடைய பெருமையை விளக்கும் சம்பவங்கள், அவருடைய கவி இயல்பைக்

குறிக்கும் சம்பவங்கள். அவருடைய தேச பக்தி வெறியை,— சுதந்திர தாகத்தை,— தயாள குணத்தை,— பெருந் தன்மையை,— மேதையை — எடுத்துக் காட்டும் சம்பவங்கள் இந்நூலில் எத்தனையோ இருக்கின்றன. அவருடைய நகைச் சுவையைக் குறிப்பிடும் பின்வரும் ரஸமான சம்பவமும் காணப் படுகிறது :—

புதுச்சேரியில் ஒரு பாகவதர் கதா காலட்சேபம் செய்து கொண்டிருந்தாராம். 'பாகவதர் ரொம்ப மோசம்!' அதனால் சபையோரால் கதையை ரஸிக்க முடியவில்லை. கூச்சல் அதிகமாயிற்று. பாகவதர் சத்தத்தை அடக்குவதற்காக அடிக்கடி 'கோபிகா ஜீவன ஸ்மரணே' என்று கோஷித்தார். சபையோர் 'கோவிந்தா கோவிந்தா' என்று கோஷித்தார்கள். இது சகிக்க முடியாமல் போகவே, பாரதியார் ஒரு காரியம் செய்தார். முருகேசம் பிள்ளையின் வேலைக்காரன் கோவிந்தனைக் கூப்பிட்டு அவன் காதோடு ஏதோ சொன்னார். கோவிந்தன் அதைக் கவனமாய்க் கேட்டுக் கொண்டான். அடுத்த தடவை சபையோர் "கோவிந்தா கோவிந்தா!" என்று கோஷமிட்டதும், கோவிந்தன் திடு திடு வென்று உள்ளே வந்து, "ஏன், ஐயா, இவ்வளவு பேருமாகச் சேர்ந்து என்னைக் கூப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டான். சபையோர் கொல்லென்று சிரித்தனர். காலட்சேபம் அத்துடன் முடிந்தது!

* * *

வ. ரா. வின் தமிழ் நடையில் அங்கங்கே தத்துவ முடிச்சுகள் காணப்படும் என்பது பிரசித்தம். இந்த நூலிலும் அத்தகைய முடிச்சுகளுக்குக் குறைவில்லை. ஒரு உதாரணம். பாரதியாரும் ஜான்ஸன் என்னும் ஆங்கில மேதாவியும் தங்களுக்குப் படாடோபமாகப் பண உதவி செய்ய வந்தவர்களை எப்படி நடத்துவார்கள் என்பதைச் சொல்லிவிட்டு, வ. ரா. எழுதுகிறார் :—

"ஜான்ஸன், பாரதியார் செய்ததையும், நம்மில் பலர் வயிற்றுப் பிழைப்பு என்று சற்றும் கூச்சமில்லாமல் கூச்சல் போடுவதையும் ஒட்டி, ஒப்பிட்டுப் பார்த்தால், நயத்தின் நயம் நன்றாய்த் தெரியும்."

நயத்தின் நயம் நமக்கு அவ்வளவு நன்றாகத் தெரியவில்லை. ஆனாலும் இந்த வ. ரா. முடிச்சில் ஏதோ ஒரு நயம் இருப்பதாக உணர்கிறோம். அதை இன்னதென்று கண்டு பிடிப்பதிலும் ஒரு நயம் இருக்கத்தான் இருக்கிறது.

* * *

ஒருவரிடம் நமக்கு அளவில்லாத பக்தி இருந்தால், அவரைப் பற்றி யாராவது பாராட்டிப் பேசினால்கூட அதில் ஏதாவது 'போடி' வைத்துப் பேசுகிறாரோ என்று சந்தேகப் படுகிறோம். அத்தகைய சந்தேகம் வ. ரா. அவர்களுக்கு ராஜாஜியின் விஷயத்தில் ஏற்பட்டிருக்கிறது.

ராஜாஜி எழுதியிருக்கும் "அச்சமில்லை" என்ற புத்தகத்தில் பாரதியாரை "வேதாந்தி" என்று குறிப்பிட்டிருக்கிறார். அதெப்படி "எங்கள் பாரதியாரை 'வேதாந்தி' என்று சொல்லலாம்?" என்று வ. ரா. கோபித்துக் கொண்டிருக்கிறார்.

பாரதியார் "அசட்டு வேதாந்தி யல்ல" "ஆஷாடபூதி வேதாந்தி அல்ல" "சோம்பேறி வேதாந்தி அல்ல" என்றெல்லாம் அறைகூவுகிறார்.

"பாரதியாரை, ராஜாஜி அர்த்தமின்றமல், வேதாந்த விளர்களின் கோஷ்டியில் சேர்த்தது வருத்தத் தக்கது" என்று வருத்தப்படுகிறார்.

ஒருவரை "வேதாந்தி" என்று சொல்வது இவ்வளவு பயங்கரமான, அவமானமான, அவதூறான விஷயம் என்று இதுவரை யாருமே எண்ணியிருக்க மாட்டார்கள்.

உண்மையில் "வேதாந்தி" என்று கூறுவது ஒருவருக்கு அளிக்கக் கூடிய மிகச் சிறந்த புகழுரை என்று நாம் கருதுகிறோம்.

இந்த நாட்டில் நம் காலத்தில் எத்தனையோ வேதாந்திகள் இருந்திருக்கிறார்கள் : இருந்து வருகிறார்கள்.

சுவாமி விவேகானந்தர் வேதாந்தி : லோகமான்ய திலகர் வேதாந்தி : தேசபந்து தாஸ் வேதாந்தி : மகாத்மா காந்தி வேதாந்தி: ஏன், ராஜாஜியே ஒரு வேதாந்திதான்.

"வேதாந்தம்" என்றால், "வேதத்தின் முடிவு" என்று பொருள். "வேதாந்தி" என்றால், வேதம் கூறும் உண்மைப் பொருளை உணர்ந்து அதற்கேற்ப வாழ்க்கை நடத்துகிறவர் என்று பொருள்.

பாரதியாருக்கு வேதத்தின் பேரில் அவ்வளவு பகை இருப்பதாகத் தெரியவில்லை.

"வேதம் நிறைந்த தமிழ்நாடு" என்றும்,

"வேதம் உடைய திந்த நாடு" என்றும் பாடியிருக்கிறார்.

"வேதாந்த சிம்மம் கர்ஜனை புரிகிறது!" என்று சுவாமி விவேகானந்தர் கர்ஜித்தார்.

அத்தகைய வேதாந்த சிம்மம்தான் பாரதியார்; ராஜாஜி சொன்னது அதுதான்.

"வேதாந்தம்" என்பதற்குச் "சோம்பேறி வேதாந்தம்" "ஆஷாடபூதி வேதாந்தம்" "அசட்டு வேதாந்தம்" என்றெல்லாம் வலிந்து பொருள் கொண்டு வ. ரா. ராஜாஜி மேல் குறைகூற விரும்பியதிலுள்ள நயத்தின் நயம் நமக்குப் புலப்படவில்லை.

"ராஜாஜி போன்றவர்கள் செப்பிடுவித்தை செய்து பாரதியாரை வேதாந்தச் சிமிழ்லே போட்டு அடைக்க வேண்டாம்" என்று வ. ரா. எச்சரிக்கிறார்.

வேதாந்தம் என்பது ஒரு சிமிழ் அல்ல. 'ஆமைச் சிமிழ்'ஐப்போல் அண்டபகிரண்டங்களையும் அவற்றைப் படைத்துக் காக்கும் ஆண்டவனையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் தத்துவம்.

இதெல்லாம் வ. ரா. அவர்களுக்குத் தெரியாத விஷயங்கள் என்று சொல்ல முடியாது. ஆயினும் நாம் முன்பே சொன்னபடி பாரதியாரிடம் அவருக்குள்ள ஒப்பற்ற அகண்ட பக்தியானது, "வேதாந்தி" என்பதில் ஏதேனும் மறைபொருளான குறை கூறல் இருக்குமோ என்று சந்தேகிக்கச் செய்திருக்கிறது.

அத்தகைய அபூர்வ குரு பக்தியை நாம் போற்றுகிறோம்.

"மகா கவி பாரதியார்" என்னும் இந்தப் புத்தகப் பொக்கிஷத்தைத் தமிழ் நாட்டுக்கு அளித்ததற்காக வ. ரா. அவர்களுக்கு நன்றி கூறி வாழ்த்துகிறோம்.

அடுத்த பதிப்பில் மேற்படி வீண் வேதாந்த விவாதத்தை எடுத்துவிட்டுப் பொக்கிஷத்தை மாசற்ற மாணிக்கப் பொக்கிஷம் ஆக்கலாம் என்று ஒரு யோசனையும் கூறிவைக்கிறோம்.

# பத்தினித் தெய்வம்

விந்தன்

சேலைத் துவைத்துப் பிழிந்து தோளில் போட்டுக் கொண்டாள்; குளித்து முழுகிக் கூந்தலை விரித்து விட்டுக் கொண்டாள்; குடத்தில் நீரை நிரப்பி இடுப்பில் வைத்துக் கொண்டாள்; குனிந்த தலை நிமிராமல் குளத்தங் கரையிலிருந்து வந்து கொண்டிருந்தாள்.

குமரிப் பெண்; குறுகுறுப்பான பார்வை; கண்ணிமைகள் கொட்டும்போது யாரையோ 'வா, வா' என்றழைப்பது போலிருந்தது. நகை முகம்; குழி விழுந்த கன்னங்கள்; நடக்கும் கை வீச்சில் ஒரு கவர்ச்சி; நடையிலே ஒரு சிங்காரம்; நடு நடுவே தண்ணீர் 'தொளக்' 'தொளக்' என்று துளும்பும் சத்தம்.

அவள் பெயர் முத்தம்மா. ஆண்டியப்பனுக்கும் அவளுக்கும் கல்யாணமாகிப் பத்து மாதங்கள் தான் ஆகியிருந்தன.

"முத்தம்மா!" — இப்படி அவளுக்குப் பின்னாலிருந்து ஒரு குரல்.

திரும்பிப் பார்த்தாள். ஒரு காலத்தில் அவள் உள்ளத்தைக் கவர்ந்திருந்த சாத்தப்பன் அங்கே நின்று கொண்டிருந்தான்.

"இவன் எப்படி இங்கே வந்தான்?" — இப்படி யோசித்துக் கொண்டே முத்தம்மா பேசாமல் நின்றாள். சாத்தப்பன் ஆவேசத்தோடு அவளை நெருங்கினான்.

"என்ன, முத்து! நல்லாயிருக்குதில்லே நியாயம்?"

"நான் என்ன செய்வேன்?"

"என்ன செய்வேனா? 'கட்டிக்கிட்டா உன்னைத்தான் கட்டிக்குவேன், இல்லாட்டா கிணத்திலாச்சும் குட்டையிலாச்சும் விழுந்து சாவேன்'னு சொன்னியே, மறந்துட்டியா?"

"என்னமோ எல்லோரும் சொல்லிக்கிட்டாப் போல நாமும் சொல்லிக்கிட்டோம்!"

"ஓஹோ! நீ என் மேலே வச்சிருந்த ஆசையெல்லாம் இம்மட்டுத்தானா?"

"ஆசையிருந்தாப் போதுமா? தமயந்திக்காச்சும் சுயம்வரம் வச்சாங்க; அவள் தனக்குப் பிடித்த நளமகாராசனுக்கே மாலையிட்டா! என் கல்யாணத்துக்கு அப்படியா சுயம்வரம் வச்சாங்க, நான் உனக்கே மாலையிட?"

"சுயம்வரம் வச்சாத்தானா? இல்லேன்னா பொம்மியம்மா மதுரைவீரன் சாமியோட ஓடிவந்த மாதிரி நீ என்னோடு ஓடி வந்துட்டா, என்ன?"

"ஐயோ! அப்படிச் செஞ்சா நாலு பேரு என்ன சொல்லுவாங்க? அதாலே உனக்கும் கெட்ட பேரு; எனக்கும் கெட்ட பேருதானே?"

"நல்லாச் சொன்னே! இப்போ பொம்மியம்மாவுக்கும் மதுரைவீரன் சாமிக்கும் ஊரிலே கெட்ட பேரு வந்துடுத்தா?"

"சாமியும் நாமும் ஒண்ணா? ஊரிலே பார்த்தா ஒருத்தர் மேலே ஒருத்தர் ஆசை வச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்களும் தாய், தகப்பன் பார்த்துக் கல்யாணம் பண்ணி வச்சவங்களும் ஒரே மாதிரியாய்த்தான் இருக்காங்க! இப்போ கல்யாணம் பண்ணிக்கிட்டேனே, அந்த மனுசனும் என்னை ஒண்ணும் சிம்மாசனத்திலே உட்கார வச்சி சோறு போடலே; இல்லே, உன்னையே கல்யாணம் செஞ்சிக்கிட்டிருந்தாலும் நீயும் என்னை ஒண்ணும் சிம்மாசனத்திலே உட்கார வச்சி சோறு போடப்



போகிறதில்லே! அன்னிக்கே ஆணுக்கு இப்படி, பொண்ணுக்கு இப்படின்னு தலே யிலே எழுதி வச்சானே, அந்தப் பிரம்மன் எழுத்துப்படிதான் எல்லாம் நடக்கும். அதாலே, நடந்தது நடந்து போச்சு; இனிமே யாச்சும் என்னே மறந்துடு!"

அதற்குள் பொறுமையை இழந்துவிட்ட சாத்தப்பன், "நானு மறந்துடுவேன்?" என்று சொல்லிக்கொண்டே முத்தம்மாவின் கரத்தைத் தீண்டினான்.

"சீ! விடு, விடு!" என்று கையை விடு வித்துக் கொண்டு, 'விர்'ரென்று தன் வீட்டை நோக்கி நடந்தாள் முத்தம்மா.



என்னதான் சாத்தப்பன் தன்னைக் காதலித்திருந்தாலும், தான் இன்னொரு வனுக்குச் சொந்தமான பிறகு அவன் தன் கரத்தைப் பலவந்தமாகத் தீண்ட வந்ததை முத்தம்மா வெறுத்தாள். "இப்படியுமா அவ னுக்குப் புத்தி கெட்டுப் போய்விடும்?" என்று எண்ணிக்கொண்டே அவள் தன் வீட்டை நெருங்கியபோது, வாசலில் ஒரு கட்டை வண்டி நின்றுகொண்டிருந்தது. அந்த வண்டி தன் பிறந்தகத்தின் வண்டி என்று தெரிந்ததும், அவள் அவசரம் அவசர மாக உள்ளே நுழைந்தாள்.

உள்ளே யாரையும் காண வில்லை. வண் டிக்காரன்தான் நின்று கொண்டிருந்தான்.

"என்னடா சங்கதி?"

"அம்மா ரொம்பக் காயலாக் கிடக்கி றாங்க; உங்களே உடனே அழைச்சுக்கிட்டு வரச் சொன்னாங்க!"

"ஐயய்யோ! அவருகூட வீட்டிலே இல்லையே! மாடு பிடிக்கப் போயிருக்காரு. அவருக்கிட்ட ஒரு பேச்சுச் சொல்லாம வரலாமா?"

"ஆபத்துக்குப் பாவமில்லே, அம்மா! அண்டை அசல்லே சொல்லிட்டு வந்தா, அவர் வந்தா சொல்லுவாங்க!"

"அப்படியா ரொம்பக் காயலாக் கிடக்கி றாங்க?"

"ஆமாம், அம்மா! இப்பவே நீங்க வந் தாத்தான் அந்த அம்மாவை உசிரோட பார்க்கலாம்!"

"அட, பாவமே! இந்தச் சேதியையா இவ்வளவு தாமசமாச் சொன்னே! ஓடு, ஓடு! போ, உடனே வண்டியைக் கட்டு! இதோ, எதிர் வீட்டு சின்னம்மாகிட்ட இந்தச் சேதி



யைச் சொல்லிவிட்டு வாரேன்!" என்று வெல வெலக்க ஓடினாள் முத்தம்மா.



'லொடக்கிட்டி' 'லொடக்கிட்டி' என்று தனக்குத் தெரிந்த பாஷையில் ஏதோ பாடிக் கொண்டே வண்டி போய்க் கொண்டிருந்தது. வழி மாளவில்லை; அந்தி வேளை மட்டும் மாய்ந்து விட்டது. ஒரே அந்தகாரம்; வண்டிக்காரன் மாட்டை அதட்டி ஓட்டும் சத்தத்தைத் தவிர வேறு சத்த மில்லை.

"அடேய்! நிறுத்து வண்டியை!"— இப்படித் திடீரென்று ஒரு உத்தரவு.

வண்டிக்காரன் வண்டியை நிறுத்தி விட்டான். அதே கணத்தில் முத்தம்மா வின் கரத்தைப் பிடித்து யாரோ ஒருவன் கரகர வென்று இழுத்தான்.

"ஐயய்யோ!" என்று அலறினாள் முத் தம்மா.

"அஹ்ஹஹ்ஹா!" என்று சிரித்தான் சாத்தப்பன்.

அவனுக்குப் பின்னால் யாரோ அவனைப் போல் சிரிக்கும் சத்தம் கேட்கிறதே! யார் அது? கவனித்துப் பார்த்தாள் முத்தம்மா.

வண்டிக்காரன்தான் சிரித்துக்கொண் டிருந்தான்.

"அட, மோசக்காரப் பாவி!"



ஊருக்கு அப்பாலிருந்த ஒரு ஒண்டிக் குடிசைக்குள் முத்தம்மாவைக் கொண்டு போய்த் தள்ளினான் சாத்தப்பன். இப்

பொழுது அவன் தன் படுமோசமான பலாத்காரச் செய்கையில் வெற்றியைக் கண்டு விட்டவன் போல் விளங்கினன். வலிமை மிகுந்த அவன் கரம் மீசையை முறுக்கி விடுவதில் ஈடுபட்டது.

கண்ணீர் தேங்கிய முத்தம்மாவின் கண்களும், இரத்தக் கறை படிந்த சாத்தப்பனின் கண்களும் ஒரு நிமிஷம் சந்தித்தன—அடுத்தபடி, "நாளைக் காலை நாலு மணிக்கெல்லாம் அடுத்த ஊர் ஸ்டேஷனிலிருந்து அரக்கோணத்திற்கு வண்டி போகுது. அந்த வண்டியில் நாம் இருவரும் போகவேண்டும். தயாராயிரு!" என்ற அதிகாரக் கட்டளை—உடனே கதவை அடைக்கும் சத்தம்; கன்னி கதறும் சத்தம்.

பெண்ணுடன் பிறக்காத பேய்! அற்ப வெற்றியில் அளவில்லாத ஆனந்தம் கொண்டு இரைந்து சிரித்தான்!

★

சிறிது நேரத்திற்குப் பிறகு, முத்தம்மாவின் உள்ளத்தில் எதற்கென்று தெரியாத ஒரு அமைதி. அந்த அமைதியில் பாரத நாட்டுப் பெண்மணிகளுக்கென்றே பிரத்தியேகமாயமைந்த கற்பைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்ற கவலை. உடனே அவன் மனக்கண் முன் ஒரு பெண் உருவம் காட்சி அளித்தது.

"தாயே! தாங்கள் யாரோ?"

"நான்தான் பத்தினித் தெய்வம், குழந்தாய்! உன் கற்பைக் காப்பாற்ற வந்தேன்."

"அப்படியா? அந்தப் பாவியின் பலாத்காரத்திற்கு முன்னுல் என் கற்பு காப்பாற்றப்படுமா? எப்படிக் காப்பாற்றுவாய், தாயே?"

"உன்னைப் பலி கொண்டு!"

"என்னைப் பலி கொண்டா?"

"ஆமாம், என்றைக்காவது ஒரு நாள் நீ அழிவது நிச்சயம்; ஆனால் உன்னைச் சேர்ந்த பழி மட்டும் என்றென்றைக்கும் அழியாது. ஆகவே நீ பழிக்குப் பயப்படுகிறயா, பலிக்குப் பயப்படுகிறயா?"

"பழிக்குத்தான், தாயே!"

"அப்படியானுல் எனக்குப் பலியாகிவிடு!"

"தங்கள் சித்தம்."

★

விடியற்காலை மூன்று மணி இருக்கும். சாத்தப்பன் வந்து கதவைத் திறந்தான். பலாத்காரம் படுதோல்வி அடைந்திருப்பதைக் கண்டான். உயிரற்ற முத்தம்மாவின் உடல் அவன் உள்ளத்தை வதைத்தது. "முத்தம்மா!" என்று வாயெடுத்தான். வார்த்தை வெளி வரவில்லை.

தூக்குக் கயிற்றைப் போல் துக்கம் அவன் துணிந்த நெஞ்சை இறுக்கிவிட்டது!

அடுத்த நிமிஷம் ஆந்தையின் 'அக்கூ!' என்ற ஒரே அழுகுரல், அங்கே நிலவியிருந்த பயங்கரமான நிசப்தத்தைக் கலைத்தது.

## கிட்டுவின் கேள்வி — 3



கிட்டு:—அப்பா, இவ்வளவு விளையாட்டுக் காட்டியும் இந்தக் குழந்தை ஏன் அழுகிறது?
தகப்பனர்:—இது தெரியவில்லையா கிட்டு? விளையாட்டுக் காட்டும் தொந்தரவைத் தாங்கமுடியாமல்தான்!


சகல விதமான
வலிகளையும்
10 நிமிஷங்களில்
நிறுத்த
ஸாரிடோன்



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 90. துயரத்துக்கு இடம் ஏது?

தந்தை தசரதன் இறந்து போனான் என்ற செய்தியைக் கேட்ட ராமன் மூர்ச்சையாய்க் கீழே விழுந்தான். பிறகு கொஞ்சம் உணர்ச்சி பிறக்கவும் என்ன எல்லாமோ சொல்லிப் புலம்பினான்.

மண்ணில் புரண்டு கொண்டிருந்த அவனைப் பக்கத்தில் இருந்தவர்கள் மெள்ளக் கைகளால் எடுத்துத் தாங்கி உட்கார வைக்கிறார்கள். வசிஷ்டர் ஆறுதல் சொல்லப் பார்க்கிறார்:

மக்களாய்ப் பிறந்து விட்ட நமக்குத் துணை என்று கருத ஏதோ இரண்டு விஷயங்கள் இருக்கின்றன.

ஒன்று: நமக்கு வேண்டியவர்களிடத்தில் பற்றில்லாத வண்ணம் நடந்து கொள்ளுவது — இதுதான் துறத்தல் என்பது.

இரண்டு: நன்மையான நெறியில் நின்று கொண்டு எல்லாருக்கும் நன்மை புரிவது.

இந்த இரண்டையும் தவிர்த்து வேறு துணை இல்லை. இறத்தல் என்பது இயற்கையோடு ஒட்டிய சாமான்ய காரியம். பிறத்தல் இயற்கையோடு ஒட்டியது என்பது தெரிந்த விஷயம். அதே போல் இறத்தலும் இயற்கையோடு ஒட்டியது. பிறகு யோசனைக்கோ மன வருத்தத்துக்கோ இடமேது?

'துறத்தலும் நல்லறத்
துறையும் அல்லது,
புறத்தொரு துணையிலை,
பொருந்து மன்னுயிர்க்(கு);—
இறத்தலும், பிறத்தல்போல்,
இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின்
வரம்பு கண்ட நீ!'

[மறத்தியோ: மறக்கலாம் என்று நீ எண்ணுகிறது போலத் தோன்றுகிறது: மறைகளின் வரம்பு கண்ட நீ: தத்துவ நூல்களை யெல்லாம் முடிவுற அறிந்து அனுபவித்தவன் அல்லவா நீ: குறிப்பு: இடித்துச் சொல்லுவதான பாவம் செய்யுளில் தெளிவாய்க் கிடக்கிறது. ஓசையும் பாவத்தை வலியுறுத்துகிறது.]

மேலும் சொல்லுகிறார்: உயிருள்ளனவாய்ப் பிறக்கும் பிராணிகள் எத்தனை எத்தனையோ; அந்தப் பிராணிகளின் தோற்றங்களுக்கு அடிப்படையான ஆதாரம் ஒன்றுமில்லை. பரம்பொருளின் மனசில் எழும் தோற்றங்கள்தான் அவை. இன்பம் என்றும், துன்பம் என்றும் சொல்லுகிற உணர்ச்சிகளுக்கு உள்ளாகி உழன்று கொண்டிருக்கின்றன அவைகள் எல்லாம். இந்த பொம்மலாட்டத்தைச் சதா பார்த்துக் கொண்டிருக்கிறான் கூற்றுவன். அப்படிப் பழகிய கூற்றுவனுடைய மனம் இரக்கம் என்பது சற்றுமில்லாமல் வறண்டு போய் விட்டது. அத்தகைய கூற்றுவனிடத்தில் தாக்ஷண்யம் ஒன்று இருப்பதாகவும் கருதலாமா?

'உண்மை இல் பிறவிகள்
உலப்பில் கோடிகள்,
தண்மையில் வெம்மையில்த்
தழுவிப் போந்துழல்
வண்மையை நோக்கிய
வறிய கூற்றின்பால்
கண்மையும் உள(து) எனக்
கருத லாகுமோ'

[உண்மை இல் பிறவிகள்: உண்மையல்லாத போலித் தோற்றங்களாகிய உயிர் வர்க்கங்கள்; உலப்பில் கோடிகள்: எண்ணி முடியாத பல கோடிக் கணக்கானவைகள்;

தண்மையில் வெம்மையில்: இன்பம் என்ற நிலையிலும், துன்பம் என்ற நிலையிலும்; தழுவிப் போந்து உழல் வன்மையை: ஒட்டி ஒட்டிச் சங்கடங்களுக்கு உள்ளாகிற அனந்த காட்சிகளை; நோக்கிய வறிய கூற்றின் பால்: பார்த்துக் கொண்டே இருந்து இதயம் வறண்டுபோன எமனிடத்தில்; கண்மையும் உளதுளை: தாக்ஷிண்யம் என்ற காரியம் இருப்பதாக.]

இந்த வார்த்தைகளிலேயே ராமனது மனம் நிலைப்படைந்து யோசனை செய்ய ஆரம்பித்தது. வசிஷ்டர் மேலும் ஒரு விஷயத்தை விளக்குகிறார்:

பிறப்பதற்கு முன்பே கருவிலேயே எத்தனையோ உயிர்கள் இறந்து போவதைக் காணத்தானே செய்கிறோம் நாம்? இது உனக்குத் தெரியாத காரியமா?

'பெறுவதன் முன்உயிர்
பிரிதல் காண்டியால்;

மறுவறு கற்பினில்
வையம் யாவையும்

அறுபதி னாயிரம்
ஆண்டும் ஆண்டவன்

இறுவது கண்(டு) அவற்(கு)
இரங்கல் வேண்டுமோ?'

[பெறுவதன் முன் உயிர் பிரிதல் காண்டியால்: தாயின் கர்ப்பத்தை விட்டுப் பிறப்பதற்கு முன்பே பிராணிகள் இறந்து போவதைக் கண்டுதானே இருக்கிறோம்; மறு அறு கற்பினில் வையம் யாவையும் ஆண்டவன்: பெண்கள் கற்பைக் காப்பதுபோல் உலகத்தை யெல்லாம் காத்து வந்த தந்தை; எத்தனை வருஷம் ஆண்டான் — அறுபதினாயிரம் என்று சொல்லும்படியாக அவ்வளவு நீண்ட காலம் ஆண்டான்; இதைக் கொஞ்சம் கணக்கிட்டுப் பார்த்தால் வருந்த வேண்டாத காரியமாகவே தோன்றும்.]

அப்பா, நீ வருந்த வேண்டாம். உன் தந்தை பிறந்தான், வளர்ந்தான். எத்தனையோ வருஷங்கள் புகழ் பெற அரசாண்டான். எல்லாம் இப்போது முடிவடைகிறது. இது அவனுடைய பாக்கிய மல்லவா? இதை விட மேலான கதி தான் உண்டா?

'ஐய! நீ யாதொன்றும்
அவலிப் பாய் அலை;

உய்திறம் அவற்(கு)இனி
இதனின் ஊங்குண்டோ?

செய்வன வரன்முறை
திருத்திச், செந்தநின்

கையினால் ஒழுக்குறு
கடன்எ லாம்' என்றான்.

[அவலிப்பாய் அலை: மனதைத் துன்புறுத்திக் கொள்ள வேண்டாம்; உய்திறம் இதனின் ஊங்குண்டோ: ஜன்மம் சடேறும் வகை இதைப்போலச் சிறந்தது உண்டோ; செய்வன வரன் முறை திருத்தி: செய்யவேண்டிய அபரக் கிரியைகளைச் சிரத்தையோடு செய்து; செந்தநின் கையினால் ஒழுக்குறு கடன் எலாம்: அழகிய உன் கையினால் நீர்க்கடன் எல்லாம் செய்ய வேண்டும்.]

வசிஷ்டர் சொல்லுகிற வார்த்தைக்கு எவ்வளவோ வலியிருக்கிறது: இறத்தல் இயற்கையோடு ஒட்டியதுதான் என்கிறார்; கூற்றுவனுக்கு இரக்கம் என்பது ஏது என்கிறார்; நெடுங்காலம் புகழோடு வாழ்ந்தான் தசரத சக்கரவர்த்தி என்கிறார். இப்படியெல்லாம் கூறியது ராமனுடைய மனசுக்குத் தாற்காலிகமாக ஆறுதலை யுண்டாக்குகிறது. ஆனாலும் அடுத்த நிமிஷத்தில் துயரம் வந்து தாக்கி விடலாம். அப்படித் தாக்காமல் இருப்பதற்கு உடலை ஏதாவது ஒன்றில் தொழிற்படும்படி புகுத்திவிட வேண்டும். புகுத்திவிட்டால் மனசின் தொழிற்பாடு பின்வாங்கி விடும். அபரக் கிரியைகள் இந்தக் காரியத்தைச் சாதிக்கின்றன. அந்தக் கிரியைகளை ராமனுக்கு நினைவூட்டுகிறார் வசிஷ்டர்.






[உலகத்தில் ஒவ்வொரு நாளும் புதுப் புது உத்தாரணர்கள் தோன்றி வருகிறார்கள். கிராமத்தைப் புனருத்தாரணம் செய்ய முயலுகிறார்கள் சிலர்; நகரத்தைப் புனருத்தாரணம் செய்யப் பார்க்கிறார்கள் பலர். இந்த ரீதியில் உலகம் உத்தாரணம் ஆகிக்கொண்டு வந்தால், பின்னொரு காலத்தில் உத்தாரணர்களுக்கே அவசியம் இன்றி உலகம் உத்தாரணம் ஆகிவிடும். அப்பொழுது உலகில் உயர்வு தாழ்வே இருக்காது. எல்லாரும் இந் நாட்டு மன்னர்களாய் விளங்குவார்கள். புலியும், பசுவும் ஒரே துறையில் தண்ணீர் குடித்துக்கொண்டிருக்கும். பாம்பும் கீரியும் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருக்கும். அந்தப் பின்னொரு காலத்தில் ஒரு புருஷனும், மனைவியும் பேசிக்கொள்ளப் போவதைத்தான் நாம் இங்கே குறிப்பிடுகிறோம்.]

**மனைவி :**—நாதா! ஏன் இப்படி வாட்டமுற்று விளங்குகிறீர்கள்?

**புருஷன் :**—கலியுகத்தில் பிறக்காமல் இந்தப் பாழும் சத்ய யுகத்தில் வந்து பிறந்தேனே என்றுதான் மனம் கலங்கி வாடி நிற்கிறேன்.

**மனைவி :**—இது என்ன, தாங்கள் கூறுவது ஆச்சரியமாக இருக்கிறதே! இந்த சத்ய யுகத்தில் பிறந்ததற்காகச் சந்தோஷப் படாமல் அந்தச் சனியன் பிடித்த கலியுகத்தில் பிறக்க வில்லையே என்று யாராவது கவலைப் படுவார்களா?

**புருஷன் :**—இந்தா! கலியுகத்தைப் பற்றித் தூஷணமாக இன்னொரு வார்த்தை சொன்னாயோ—

**மனைவி :**—இந்தாருங்கள், எப்பொழுது பார்த்தாலும் காகிதத்தையும், பேனாவையும் கையில் வைத்துக் கொண்டு தலையைச் சொறிந்து கொண்டிருப்பதால் தங்கள் புத்தி சற்று பேதலித்திருப்பதாகத் தெரிகிறது. சற்று வேடிக்கையாக சத்தவனத்துக்குப் போய் விட்டு வரலாம், வாருங்களேன்! அதோ, அந்த மரத்தடியில் எலியும் பூனையும் கொஞ்சி விளையாடிக் கொண்டிருப்பதைப் பாருங்கள். அதோ, அந்த ஆட்டுக்குட்டி அந்தச் சிங்கக் குட்டியின் மீது சவாரி செய்து கொண்டிருப்பதைப் பாருங்கள்!

**புருஷன் :**—ஐயோ! உலகம் இப்படியா கெட்டுப் போகவேண்டும்? இந்தப் பாழும் உத்தாரணர்கள் உத்தாரணம் பண்ணுகிறேன், உத்தாரணம் பண்ணுகிறேன் என்று உலகத்தை இப்படியா குட்டிச்சுவராக அடித்து விட்டுச் செல்ல வேண்டும்! பழைய கலியுகமாய் இருந்தால் அந்த ஆட்டுக்குட்டி இந்நேரம் சிங்கக்குட்டி வயிற்றின் மேலா இருக்கும்!

**மனைவி :**—ஐயோ! எதற்காக இப்படி இந்த சத்ய யுகத்தை நொந்து கொண்டிருக்கிறீர்கள்? அப்படி இந்த சத்ய யுகத்தில் இல்லாத சுகங்கள் கலியுகத்தில் என்ன இருந்தன?

**புருஷன் :**—என்னவா! வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும் கலியுகத்தில் ஹாஸ்ய ரஸம் நிறைய இருந்தது. ஹாஸ்ய எழுத்தாளர்களுக்கு எழுதுவதற்கு நிறைய விஷயங்கள் கிடைத்துக் கொண்டிருந்தன. நானும் ஹாஸ்யமாக ஏதாவது எழுதவேண்டும் என்று பத்து வருஷங்களாக மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறேன். ஒரு விஷயம் கிடைக்க வேண்டுமே! ஆ! இருபதாம் நூற்றாண்டே! இருபதாம் நூற்றாண்டு எழுத்தாளர்களே! உங்கள் பாக்கியமே பாக்கியம்!

**மனைவி :**—எப்பொழுது பார்த்தாலும் இருபதாம் நூற்றாண்டைப் பற்றியே புலம்பிக் கொண்டிருக்கிறீர்களே, அப்படி அந்தக் காலத்தில் நடந்த ஹாஸ்ய விஷயங்கள்தான் என்ன?

**புருஷன் :**—ஒன்றா, இரண்டா! லட்சோப லட்சம்! கோடியே கோடி!

**மனைவி :**— உதாரணத்துக்கு ஒன்று இரண்டுதான் சொல்லுங்களேன்!

**புருஷன் :**— சொன்னால் உனக்கு எங்கே புரியப் போகிறது? யுத்தம்னு கேள்விப்பட்டிருக்கிறாயா?

**மனைவி :**—யுத்தமா! அப்படி என்றால்?

**புருஷன் :**—அதுதான் நான் முன்பே சந்தேகப் பட்டேனே! யுத்தம் என்றால் என்ன என்று கேட்கும் நிலைமைக்கு இப்பொழும் உலகம் வந்து விட்டது. பள்ளிக்கூடத்தில் பழைய உலக சரித்திரம் சொல்லிக் கொடுத்தால்தானே உனக்கு இதெல்லாம் தெரியப் போகிறது? அதுதான் பழைய உலகம் எப்படி இருந்தது என்று யாருக்கும் தெரியாதபடி பழைய சரித்திரப் புஸ்தகங்களையெல்லாம் கொளுத்தி விட்டார்களே! என்னிடம்தான் பழங்கால உலகத்தைப் பற்றிய ஒரு புஸ்தகம் மிஞ்சிற்று. அதைப் படி படி என்று உன்னிடம் எவ்வளவோ படித்துப் படித்துச் சொன்னேன், நீ எங்கே கேட்டாய்?

**மனைவி :**—சரி, அது இருக்கட்டும். என்னமோ யுத்தம்னு சொன்னேனே, அது என்ன சொல்லவில்லையே?

**புருஷன் :**—இரண்டு தேசத்து ஜனங்கள் ஒருவரை ஒருவர் கொன்று மடிப்பதற்குத்தான் யுத்தம் என்று பெயர்.

**மனைவி :**—ஐயோ! கொலையா! எதற்காக?

**புருஷன் :**—எல்லாம் ஒருவர் நாட்டை இன்னொருவர் கைப்பற்றத்தான்.

**மனைவி :**—ஆமாம், இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறது. எனக்கு ஒன்றும் புரியவில்லையே!

**புருஷன் :**—என்ன ஹாஸ்யமா? ஒரு பக்கத்தில் யுத்தம் என்ற பெயரால் லட்சோப லட்சம் ஜனங்கள் மடிந்து கொண்டிருப்பார்கள். அதைப் பற்றிக் கேள்வியா, முறையா ஒன்றும் இருக்காது. ஆனால் அதே சமயத்தில் இன்னொரு பக்கத்தில் யாரோ ஒரு ஆளைக் கொன்று விட்டதற்காக ஒரு நூறு பேரைச் சிறையில் பிடித்து அடைத்து விசாரணை நடத்திக் கொண்டிருப்பார்கள்.

**மனைவி :**—(சிரிக்கிறாள்.)

**புருஷன் :**— ஆ! சிரிக்கிறாயா! அதுதான் அந்த இருபதாம் நூற்றாண்டில் இருந்த ஹாஸ்யம். யுத்தம் என்ற பெயரால் லட்சம் பேரைக் கொன்றவனை வணங்குவார்கள். ஆனால் அதே ஆள் ஏதாவது கோபத்தில் பக்கத்து வீட்டுக்காரனைக் கொன்று விட்டால் சரி, உடனே அவனைப் பிடித்து விசாரணை நடத்தி, அவனைத் தூக்கிவிட்டு விடுவார்கள்.

**மனைவி** (சிரித்துக் கொண்டே) **:**— இது என்ன வேடிக்கையாக அல்லவா இருக்கிறது!

**புருஷன் :**—இதைவிட அந்தக் காலத்தில் இன்னும் எத்தனையோ வேடிக்கைகள் இருந்தன. படிப்பது ராமாயணம் இடிப்பது பெருமாள் கோவில் என்று கேள்விப் பட்டிருக்கிறாயா?

**மனைவி :**—கேள்விப் பட்டிருக்கிறேன்.

**புருஷன் :**—அந்தக் காலத்தில் ஆங்கிலேயர் என்று ஒரு ஜாதியினர் இருந்தனர். அவர்கள் அந்தக் காலத்தில் அப்படித்தான் செய்து கொண்டிருந்தனர். ஜனநாயகத்துக்காக யுத்தம் பண்ணுகிறோம் என்று தினம் பத்திரிகைகளில் அறிக்கைகள் வெளியிடுவார்கள். ஆனால் அதே சமயம் ஜனநாயகத்துக்கு விரோதமாக என்னென்ன உண்டோ, அத்தனையும் செய்து கொண்டிருப்பார்கள்.

**மனைவி :**—(சிரிக்கிறாள்.)

**புருஷன் :**—இன்னும் கேள். லட்சோப லட்சம் செலவு செய்து எத்தனையோ தர்ம சத்திரங்கள், சாவடிகள் கட்டுவார்கள் சிலர். ஆனால் இதே ஆசாமிகளிடம் எவனாவது பிச்சைக்காரன்—

**மனைவி :**—என்ன பிச்சைக்காரனா! அப்படி என்றால்?

**புருஷன் :**—ஓஹோ! பிச்சைக்காரன் என்றால் யார் என்று உனக்குத் தெரியாதா! எங்கே தெரியப் போகிறது? பழங்கால உலக சரித்திரத்தைப் படித்தால்தானே தெரியும்? பிச்சைக்காரன் என்றால் சாப்பாட்டுக்கு இல்லாமல் பிறரிடம் போய், காலணா, அரையணா கொடு என்று கெஞ்சிக் கேட்பவன்.

**மனைவி :**—ஐயோ! மனிதனா அப்படிப் பிச்சை கேட்பான்?

**புருஷன் :**— மனிதனேதான்! ஒரு பக்கம் லட்சம் ரூபாய் செலவு செய்து பிச்சைக்கார விடுதிகள் கட்டுகிறவர்கள் இன்னொரு பக்கம் பிச்சைக்காரன் காலணா கேட்டால் கொடுக்கமாட்டார்கள். இன்னொரு வேடிக்கையைக் கேட்டாயா! காலணா இல்லாத பிச்சைக்காரனைப் பற்றிக் கதைகள் எழுதி, கால் கோடி ரூபாய் சம்பாதித்தவர்கள் எத்தனையோ பேர்! இப்பொழுது நான் எந்தப் பிச்சைக்காரனைப் பற்றிக் கதை எழுதுவது? பழைய காலம்போல் பிச்சைக்காரர்கள் இருக்கிறார்களா, அல்லது பணக்காரர்கள்தான் இருக்கிறார்களா? இல்லை, வரதக்ஷணைக் கொடுமைதான் இருக்கிறதா?



**மனைவி** :—வரதக்ஷிணையா? அப்படி என்றால்?

**புருஷன்** :—இந்தா! இப்படி நீ ஒவ்வொரு வார்த்தைக்கும் அர்த்தம் கேட்டுக் கொண்டிருந்தால் என்னால் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. இந்தா, இந்தப் பழங்கால சரித்திரப் புஸ்தகத்தைப் படித்துவிட்டு என்னோடு பேச வா!

**மனைவி** :—என்ன இப்படிக் கோபித்துக் கொள்கிறீர்களே! இந்த ஒரு வார்த்தைக்கு மட்டும் அர்த்தம் சொல்லுங்கள் போதும்.

**புருஷன்** :— வரதக்ஷிணை என்றால் பழங்காலத்தில் ஸ்திரீகளைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்காகப் புருஷர்களுக்குக் கொடுக்கப்படும் லஞ்சம்.

**மனைவி** :—புருஷன் ஸ்திரீயைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு லஞ்சமா? ஆச்சரியமாய் இருக்கிறதே! ஆமாம், இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறது?

**புருஷன்** :—என்ன ஹாஸ்யமா? சொல்லுகிறேன் கேள். பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கும்போது வரதக்ஷிணைக் கொடுமையை எதிர்த்துக் காரசாரமாய்ப் பேசும் தகப்பனார், தம் பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணுகையில் தாம் முன்பு பேசியதை யெல்லாம் மறந்து பிள்ளைக்கு வரதக்ஷிணை கேட்க ஆரம்பித்து விடுவார்.

**மனைவி** :—(சிரிக்கிறாள்.)

**புருஷன்** :—பார், நீயே சிரிக்கிறாயே! இத்தனை ஹாஸ்ய ரஸங்கள் நிறைந்த அந்தக் கலியுகத்தில் பிறந்திருந்தால் நான் எத்தனை பெரிய ஹாஸ்ய எழுத்தாளனாக மாறியிருப்பேன்!

**மனைவி** :—அப்பொழுது என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு லஞ்சம் வேண்டுமென்று கேட்டிருப்பீர்கள் அல்லவா?

**புருஷன்** :—ஆம், கட்டாயம் கேட்டிருப்பேன். ஆனால் அதே சமயம் வரதக்ஷிணை வாங்கக்கூடாது என்று வரிந்து வரிந்து எழுதிப் பணம் சம்பாதித்துக் குவித்திருப்பேன்.

[இரண்டு பேரும் கொல்லென்று வாழ்ந்து சிரிக்கிறார்கள். பக்கத்து வாய்க்காலில் ஒரே துறையில் தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும் புலியும், பசுவும் இவர்களைப் பார்த்து ஆச்சரியத்தால் கண்களை அகல விரிக்கின்றன.]

திரை




## இதை அளிப்பதிலேயே ஒரு அலாதி அந்தஸ்து

டிலக்ஸ் டெனர் சிகரெட்டை உங்கள் சிநேகிதர்கள் ரஸிப்பார்கள். 100% உத்தரவாதமுள்ள தூய வர்ஜீனியா புகையிலையிலிருந்துதான் டெனர்ஸ் தயாரானவை. டெனர் சிகரெட்டுகள் உங்களது ரஸிகத் தன்மைக்கு ஒரு அத்தாட்சி ஆகும். இவைகளின் தனி மணம் இவைகளுக்கே உரித்தானது. மெல்லிய தொண்டை உடையவர்கள் அனுபவிக்கக் கூடியது டெனர்தான்.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD. LONDON.

# தென் இந்தியா ரயில்வே

## கும்பகோணத்தில் மகாமக உத்ஸவம்

பிப்ரவரி 1945

★

1945 பிப்ரவரி மாதம் கும்பகோணத்தில் நடக்கப் போகும் மகாமக உத்ஸவத்தின் பொருட்டு எந்த விதமான விசேஷ ஏற்பாடும் செய்ய இயலாமல் இருப்பதையும் ஷை உத்ஸவ காலத்தில் யாதொரு ஸ்பெஷல் டிரெயினும் விடுவதற்கு இல்லை என்பதையும் தென் இந்தியா ரயில்வேயார் மிகமிக வருத்தத்துடன் பொது ஜனங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். டிரெயின்களில் ஜன நெருக்கடி ஏற்படாமல் தடுக்கும் பொருட்டு ஸ்டேஷன்களில் டிக்கட் கொடுப்பது கட்டுப்படுத்தப்படும். ஆகையால் ஷை உத்ஸவத்தின் பொருட்டு கும்பகோணத்திற்கு ரயில் மூலம் பிரயாணம் செய்ய வேண்டாம் என்று பொது ஜனங்கள் எச்சரிக்கப்படுகிறார்கள். யுத்த கால நிலைமையின் காரணமாக இவ்வாறு முடிவு செய்யும்படியான நிர்ப்பந்தத்தை எவ்வளவுதான் வருந்திய போதிலும் தவிர்க்க முடியாத வகையில் ரயில்வேயாருக்கு நேர்ந்திருக்கிறது.

## வெஜிடபில் கதம்ப ஊறுகாய்




வெள்ளரிக்காய், இஞ்சி, பாவக்காய், கீரைத்தண்டு, வாழைத்தண்டு, கத்தரிக்காய், பச்சை மிளகாய், பச்சை மிளகு - சொல்லும்போதே வாயில் ஜலம் ஊறுகிறது - முதலியவை சேர்த்து கைபடாமல் ஜிஞ்ஜாமிருதமாகத் தயாரிக்கப்பட்டது. வாய்க்கு வெகு ஜோர். உடம்பிற்கு பரம சுகம். இன்றே உங்கள் தேவைக்கு எழுதவும். இரு சைஸ்களில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். & கோ.

வாஸனை திரவிய வியாபாரிகள்

கும்பகோணம்

மதராஸ் விநியோகஸ்தர்கள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டுகள் :

ஏ.கே. ஏ.ஏ. அண்ணாமலை நாடார் & பிரதர்ஸ்

மதுரை

---

# தி இந்தியன் பாங்க்

## லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ் :

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"

வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000

செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 33,48,561

ரிஸர்வ் நிதி ரூ. 32,00,000

டெபாஸிட்டுகள் ரூ. 10 கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.